ஓம்

# புத்தகங்களின் பயன்.

வெளியிட்டவர்:-

லெ. சோமசுந்தரன்,
கீழச்சிவற்பட்டி.

கீழச்சிவற்பட்டி, பி. அழகாபுரி,

ர [illegible] ிரஸில் பதிப்பிக்கப்பெற்றது.

1934.

# முகவுரை.

---

"புத்தகங்களின் பயன்" என்னும் பொருள் பற்றிச் சிறந்த கட்டுரை எழுதுவோர்க்குத் தங்கப்பதக்கம் பரிசளிப்பதாக, நாட்டரசன்கோட்டை ஸ்ரீ பாரதி வாசகசாலையார் பத்திரிகைகளில் வெளியிட்டிருந்தனர். இப் போட்டிக்கு இருபத்தோர் அன்பர் கட்டுரை எழுதி அனுப்பினர்கள். பரிசுபெற்ற கட்டுரையன்றி மற்ற கட்டுரைகளிலும் அறிவுக்கு விருந்தான பல உயரிய விஷயங்கள் இருந்தனபற்றி அவைகளையும் பரிசுபெற்ற கட்டுரையுடன் சேர்த்து புத்தகமாக வெளியிட்டால் வாசகர்க்கும், வருங்காலச் சிறூர்கட்கும் பயன்படுமெனக் கருதி பல அன்பர்கள் என்னைக் கேட்டுக் கொண்டதற்கிணங்க, அவர்கள் விருப்பம் கெடாதவாறு பரிசுபெற்ற கட்டுரையுடன் மற்ற கட்டுரைகளின் சாராம்சத்தையும் எடுத்துத் தொகுத்து "புத்தகங்களின் பயன்" என்ற பெயராலேயே இச் சிறு நூலை வெளியிடலானேன்.

இம்மாதிரி நல்ல முயற்சிக்குச் சந்தர்ப்பம் அளித்த பாரதி வாசகசாலையாரை நாம் போற்றுதற்குக் கடமைப்பட்டிருக்கிறோம். கல்வியில் உணர்ச்சியும்—ஊக்கமும் ஊட்ட இதுபோன்ற முறைகளைக் கையாளுதல் சாலச் சிறந்ததேயாகும். இதிற் கிடைக்கும் சொற்ப லாபமும் பாரதி வாசகசாலையின் உபயோகத்திற்குச் சேருமாதலால் அன்பர்கள் இப்புத்தகத்தை ஆதரித்தல் கடமையாகும்.

கீழச்சிவற்பட்டி,
1—1—34.

தங்கள்,
லெ. சோமசுந்தரன்.

இக்கட்டுரைப் போட்டிக்கு

## நீதிபதிகளாயிருந்தவர்கள்.

---

(1) மதுரை வழக்கறிஞர்:

டி. சி. சீனிவாசய்யங்கார் அவர்கள்.

(2) மகிபாலன்பட்டி பண்டிதமணி:

மு. கதிரேசச் செட்டியார் அவர்கள்.

பரிசு பெற்ற

# திரு; சுப. மு. கண்ணப்பர்
# கட்டுரை.

---

பீடிகை.



முற்பவத்திற் செய்த நல்வினையின் பயனாக நாம் அடைதற்கரிய மானிடப் பிறவியைப் பெற்றிருக்கிறோம். மனிதப்பிறவிக்கு விசேஷமாகப் பகுத்தறியும் தன்மை அமைந்திருப்பதனாலேயே அப் பிறவி உயர்ந்ததெனக் கொள்ளப்படுகிறது. எண்ணற்ற பிறவிகளுள் உயர்ந்த இம்மனிதப் பிறவியைப் பெற்றுள்ள நாம் இயற்கையாகவுள்ள அறிவோடு செயற்கையறிவும் பெற்றுத் திகழ வேண்டுவது அவசியமாகும். அத்தகைய செயற்கையறிவை அடைதற்குரிய முக்கிய சாதனம் எது என்பதை ஆராய்வதன் மூலம் இக்கட்டுரையின் நோக்கம் பெறப்படலாம்.

## முற்கால நிலைமையும் அச்சுப்புத்தகங்களும்.

மக்களின் அறிவைப் பண்படுத்துவதற்கும், வளர்ச்சியடையச் செய்வதற்கும், பொதுச் சபைகளே சிறந்த சாதனங்கள் என்பதை எவரும் மறுக்கவியலாது. அது கருதியே பண்டைக் காலத்தில் பெரியோர்கள் பொதுச் சபைகளை அமைத்து அவைகளில் அறிஞர்களைக்கொண்டு சொற்பொழிவுகள் நிகழ்த்துவதன் மூலம் மக்கட்கு அறிவு வளர்ச்சியை உண்டாக்கி வந்தனர். அக்காலத்தில் கல்வி கற்க விரும்புவோர், ஆசிரியர்களையடைந்து பன்னெடுங்காலம் அவர்களுடன் வாழ்ந்து வாய்ப்பாடமாகவும், பொதுச்சபைகளில் சொற்பெருக்குகள் நிகழுங் காலங்களில் சென்றிருந்து கேட்டுங்

தான் அறிவு விருத்திக்குரிய விஷயங்களைக் கற்றுக்கொள்ள முடிந்தது. அதுவுமன்றி அவசியமானால், ஒவ்வொருவரும் தத்தமக்கு வேண்டிய நூல்களைத் தாமே ஏடுகளில் எழுதிப் படிக்க வேண்டியதாகவுமிருந்தது. இம்முறை தீவிரமான அறிவு வளர்ச்சிக்கு எவ்வளவு கஷ்டமும் காலவிரயமுமானது என்பது அனைவருக்கும் தெரிந்ததே. ஆனால் இம்முறையிலுள்ள ஓர் அரிய அனுகூலத்தை இங்கு குறிப்பிடுதல் அவசியம். தமக்கு வேண்டிய நூல்களைத் தாமே எழுதிப் படிப்பதனால் படித்த நூல் படித்த அளவில் அழுத்தமாக மனதிற் பதிந்துவிடும். முற்கால மேதாவிகளுக்கு ஞாபக சக்தி விசேஷித்திருந்ததற்கு முக்கிய காரணம் இதுவேயாம். கற்ற கற்ற விஷயங்கள் எல்லாவற்றையும் மறந்துவிடாதிருக்கும் பொருட்டே அக்கால நூல்களனைத்தும் செய்யுட்களாக எழுதப்பெற்று வந்ததாகத் தெரிகிறது. பிற்காலத்தில் அச்சுவேலை அனுஷ்டானத்திற்கு வந்தபிறகு இக் கஷ்டங்களெல்லாம் (நூல்களை எழுதும் கஷ்டம்) ஒழிந்து எல்லா நூல்களும் புத்தக வடிவமாக ஏராளமாய் வெளிவரலாயின. சுருங்கிய செலவில் தாராளமாகப் பலதிற நூல்களையும் வாங்கிப் படிக்கும் வசதி ஏற்பட்டது.

புத்தகங்களின் பெருமை.

பல்லாண்டுகட்குமுன் நிகழ்ந்தவைகளையும், அக்காலத்தில் உயிர்வாழ்ந்த அறிஞர்களின் வாழ்க்கை முறைகளையும் அவர்களின் நீதிமொழிகளையும், பல்லாயிரம் மைல்களுக்கப்பால் வதியும் அந்நியதேச மேதாவிகளின் பலதிறக்கருத்துக்களையும், புத்தகங்களின் மூலம் நாம் அறிகிறோம். புத்தகங்களின் உதவியின்றேல் எம்மதத்தினரும் தம்மத நூலென்று போற்றும் திருவள்ளுவரின் திருக்குறளை — தமிழ்மறை எனப்படும் திருக்குறளையும், மற்றும் எண்ணரியநீதி நூல்களை

யும் எளிதில்கற்றல் அசாத்தியமாகும். கல்வியிற்பெரியகம்பன் இயற்றிய இராமாயணமும் மக்களின் வாழ்க்கை முறைக்கு இன்றியமையாது வேண்டப்படும் அநேக நீதிகளைப் போதிக்கும் பாரதக் கதையும், ஆங்கிலப் பெரும் புலவரான ஷேக்ஸ்பியரின் நாடகங்களும், இன்று புத்தகங்களாக வன்றோ நம்முன் காட்சியளிக்கின்றன. கண்ணெனத் தகுந்த எண்ணும் எழுத்தும் புத்தகங்களிலன்றோ அடங்கிக் கிடக்கின்றன. பள்ளியில் பயிலும் மாணவர்கட்கும், அவர் தம் ஆசிரியர்கட்கும் இடையில் கல்வி வளர்ச்சிக்கு ஆதாரமாக விருப்பது புத்தகங்களன்றோ! மொகலாய வம்சத்து மன்னர்களின் அணியிலேயே உலகம் போற்றும் பெருங் கீர்த்தியோடும் ஒப்புவமையில்லாத் தனிப் பெருஞ் சிறப்போடும் சற்றேறக்குறைய ஹிந்துஸ்தானம் முழுவதையும் தனியரசு செலுத்தும் பாக்கியம் பெற்றிருந்த அக்பர் சக்கிரவர்த்தி, கல்விமான்களை ஆதரிக்கும் பண்பினராகவும், கலாபிவிருத்தியில் பேராவலுடைய பெரியாராகவுமிருந்தார்என்பது சரித்திரம் படித்த எவருக்கும் தெரிந்ததாகும். அவர் சரித்திரத்தில் காணப்பெறும் பொன்னெழுத்துக்களால் பொறிக்கத் தக்க ஒன்றை இங்கு குறிப்பிடுதல் பொருந்தும். அக்பர் தமது அரண்மனையில் மிகப் பிரம்மாண்டமானதோர் நூல் நிலயத்தை ஸ்தாபித்து மிகச்சிறந்த நூல்களை ஏராளமாக அதில் சேமித்து வைத்திருந்தார். அவருக்குத் தன்னளவில் எழுதப்படிக்கத் தெரியுமாவென்பது தீர்க்கமாக அறியமுடியாதபோதிலும், உயர்ந்த நூல்களின் விழுமிய கருத்துக்களை அறிஞர்கள் வாசிக்கக்கேட்டு உவத்தலையே தமக்குரிய காலப் போக்காகக் கொண்டிருந்தார். நற்கலைப் பெருக்கத்தில் அவர் பேரூக்கம் காட்டிவந்தார். அவருடைய புத்தகசாலையில் 24000-க்கு அதிகமான புத்தகங்கள் இருந்தனவாம். அச்சு இயந்திரமும் இதர சாதனங்களும் இப்போதைப்போல்

மலிந்திராத அக்காலத்தில் பல்லாயிரக்கணக்கான அரிய கையெழுத்துப் புத்தகங்களைச் சேகரிப்பதின்பொருட்டு அவர் எத்தகைய பிரயாசை எடுத்துக்கொண்டிருக்க வேண்டுமென்பதைச் சிந்திக்கும்போது அவருக்கிருந்த நூலார்வம் தெற்றெனத் தெரிகிறதன்றோ? அச்சியந்திரமும் இதர சாதனங்களும் பெருகியுள்ள இக்காலத்தில் அக்பர் இருந்திருப்பாரானால் அவருடைய புத்தகசாலை கோடிக்கணக்கான புத்தகங்களை யுடையதாகவிருக்கு மென்பதில் சந்தேகமில்லை. அக்பர் புத்தகங்களின்பால் கொண்டிருந்த பிரேமை அளவிடற்கரியதாகும். இவ்வளவு பிரேமைக்கும் புத்தகங்களின் பெருமையையும், பயனையும் அவர் நன்கு உணர்ந்திருந்ததன்றோ காரணம்? புத்தகப் படிப்பின் இன்றியமையாமையை நன்குணர்ந்த மகாத்மா காந்தி தமது சுயசரித்திரத்தில் "ஒரு புத்தகத்தின் மந்திர சக்தி" என்ற அத்தியாயத்தில் "ரஸ்கினுடைய "Unto this lost" என்ற புத்தகத்தை படிக்கத்தொடங்கினேன். இடையிற் கீழேவைக்க முடியவில்லை. என் உள்ளத்தை அது முழுதும் கவர்ந்துவிட்டது. அந்த நூலின் இலட்சியங்கட் கிணங்க என் வாழ்க்கை முறையை மாற்றிக்கொள்ளத் தீர்மானித்தேன். அதிலிருந்து என் வாழ்க்கைமுறை அந்நூலுக்கேற்ப அடியோடு மாறி விட்டது" என்று குறிப்பிட்டிருக்கிறார். அன்றியும் குடும்ப வாழ்க்கை என்ற அத்தியாயத்தில் 'குழந்தைகளின் புத்தகப் படிப்பை நான் அலட்சியம் செய்யவில்லையாயினும் அவசியம் நேர்ந்தபோது அதைப் பலிகொடுக்கத் தயங்கவில்லை. ஆதலின் என் புதல்வர்கள் என்மீது குறைகூறுவதற்கு நியாயமுண்டு. நான் அக்குற்றத்திற்கு ஓரளவு உட்பட வேண்டியவனாகவிருக்கிறேன்' என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

புத்தகங்களின் பயன்.

பள்ளியிற் கல்வி கற்கும் மாணவர்கள் ஆயுள் முழுதும் ஆசிரியரிடம் பாடங்கேட்பதில்லை. அது முடியவும் முடியாது. நூல்களைப் படித்தறிய ஒருவாறு திறமை ஏற்பட்ட பின்னர், இறகு முளைத்த பறவைக்குஞ்சுகள் தத்தித்தத்திப் பறக்கத்தொடங்கிச்சில நாளில் தாங்களாகவே இரை தேடிக் கொள்வது போல, தங்கள் சொந்த முயற்சியால் கல்வியை அபிவிருத்தி செய்துகொள்ளுகின்றனர். இப்போது அவர்களின் கல்வி வளர்ச்சிக்குப் புத்தகங்கள் துணையாகவிருக்கின்றன. அவைகளிலேற்படும் சந்தேகங்களை அகராதி முதலிய துணை நூல்களின் உதவியைக்கொண்டு நிவர்த்தித்துக்கொள்ளுகின்றனர். சொந்த முயற்சியால் புத்தகங்களின் உதவியை மட்டும் கொண்டு கல்வி அபிவிருத்தி செய்துகொண்ட அநேகர் பெரும் புலவர்களாகிப் பேரும் புகழும் அடைந்துள்ளார்கள். உலகில் பலதுறைகளிலும் பாண்டித்தியம் பெற்ற மேதாவிகள் மிகு பிரயாசையுடன் வரைந்த அறிவுக் கட்டுரைகள் யாவும் புத்தக வடிவமாகவே மிளிர்கின்றமையால் அவற்றை ஆராய ஆரம்பித்த ஒருவனுக்கு அவை தீர்க்க ஞானத்தைக் கொடுத்து அவனை உயர்த்துவிக்கின்றன. பேரறிவாளர்களால் எழுதப்பெற்ற உத்தம நூல்கள் மேலான கருத்துக்களைத் தம்முள் அடக்கிக்கொண்டு நிற்றலால் உலகினருக்கு உயரிய ஞானத்தை அளிக்கவல்லவைகளாக இருக்கின்றன. ஒருவனுக்கு மனக்கிலேசத்தால் மனவமைதியில்லாதபோது, அவன் சிறந்த ஒரு நூலினை வாசிப்பானாயின் அவன் தன்னுடைய சஞ்சலத்தைச் சற்றேனும் மறந்திருக்கவோ, அல்லது ஒருவித தேறுதல் அடையும்படியான ஆற்றலையடைதற்கோ கூடியவனாகிறான். துயரக்கடலில் ஆழ்ந்திருக்கும் ஒருவனை நல்ல நூல்களே நன்கு தேற்றுகின்றன.

புத்தகங்களின் பெரும் பயனைச் சுருக்கிச் சொல்ல வேண்டுமானால்புதிய எண்ணங்களையும் புதிய சக்திகளையும் வளர்ப்பவை புத்தகங்களே என்று சொல்வது பொருந்தும். இதை உணர்த்துவதற்கன்றோ "தான் கற்ற நூலளவேயாகுமாம் நுண்ணறிவு" என்ற வாக்கியமும் எழுந்தது. புத்தகங்களின் உயரிய பயனை உணர்ந்தன்றோ பெரியோர்கள் "புஸ்தகம் ஹஸ்தபூஷணம்" என்று போற்றினார்கள்.

## புத்தகசாலைகள்.

இக்கட்டுரையில் புத்தகசாலைகளைப்பற்றிச் சிறிது குறிப்பிடவேண்டுவது அவசியம். அறிவை வளர்க்கும் பொது அமைப்புக்களுள் புத்தகசாலைகளே முதன்மை பெற்றவை எனலாம். புத்தகசாலைகளானது சகலகலைகளையும் போதிக்க வல்ல ஒரு சர்வகலாசாலை போன்றுமுள்ளன. கல்வியின் பல துறைகளிலும் அறிவை விருத்தி செய்துகொள்ளப் புத்தகசாலைகளே பெரிதும் ஏற்றவைகளாக விருக்கின்றன. பொதுமக்கள் ஒன்றாய்க் கூடுவதும் தாங்கள் அறிந்த உண்மைகளை ஒருவரோடொருவர் தர்க்கித்துக் கொள்ளுவதும் புத்தக வாசகசாலைகளிலேதான். இந்த அறிவுச் சபைகட்குச் செல்வோர் மேதாவிகளாகவும் சுகுண சம்பத்துடையவர்களாகவும், பரிமளிப்பரென்பது திண்ணம். புத்தகங்களால் மக்கட்குள்ள பயனை உணர்ந்த மேல் நாடுகள் ஒவ்வொன்றும் தங்கள் தங்கள் நாட்டில் புத்தகசாலைகளை வளர்ப்பதில் பிரதான சிரத்தை கொண்டிருக்கின்றன வென்பது யாவருமறிந்ததே. சுருக்கமான செலவில் அநேக நூல்களை வாசிக்கும் வசதியையும், அநேகர் ஒருங்கு சேர்வதால் பரஸ்பரம் அன்னியோன்னியமடைவதற்குச் சந்தர்ப்பமளித்தலையும் புத்தகசாலைகள் கொள்கையாகக் கொண்டிருக்கின்றன. ஆகவே

தான் அவை சிறந்தவையெனக் கொள்ளப்படுகிறது. இத்தகைய இன்றியமையாத அமைப்புக்கள் நமது தமிழ்நாட்டில் பலவேறு இடங்களிலும் ஏற்படுவதற்கான பிரசாரங்களைச் செய்துவரும் சென்னைப் புத்தகாலய சங்கத்தார்க்கு, இந்தக் கட்டுரையில் நன்றி செலுத்தப்பெற வேண்டுவது அவசியமாகும்.

முடிவுரை.

"முற்கால நிலையும் அச்சுப் புத்தகங்களும்" "புத்தகங்களின் பெருமை" "புத்தகங்களின் பயன்" 'புத்தகசாலைகள்' என்ற தலைப்புக்களின் கீழ் எழுதப்பட்டிருக்கிற விஷயங்கள் படிப்பார்க்கு ஓரளவு புத்தகங்களின் பயனை உணர்த்தலாம் என்ற நம்பிக்கையுடன் இக்கட்டுரை முடிக்கப்படுகிறது.



## குறிப்பு.

திரு; சுப. மு. கண்ணப்பர், தனக்குக் கிடைக்க வேண்டிய பரிசை, தாம் 'வாசகசாலை'க் காரியதரிசி என்ற காரணங் கொண்டு பெற மறுத்து, தனக்கு அடுத்தபடியாகக் கட்டுரை எழுதினர் என்று நீதிபதிகளால் தேர்ந்தெடுக்கப்பட்ட திரு; வ. மு. இரத்தினேசுவரய்யர் அவர்களுக்கு மனமுவந்தளித்த பெருந்தன்மை பாராட்டுதற்குரியதாகும்.

திரு; சுப. மு. கண்ணப்பர் மனமுவந்தளித்த பரிசை,

விருப்பமுடன் ஏற்றுக்கொண்ட திரு; வ. மு.

# இரத்தினேசுவரய்யரவர்களின் கட்டுரை.

---

புத்தகம் என்னுஞ் சொல்.

இப் பரதகண்டத்தின் கண்ணே மொழிகள் வழங்கி வருவதற்கு முன்பே புத்தகம் என்னும் வார்த்தை இருந்ததாகத் தெரிகின்றது. தென்முகத் தெய்வத்தின் திருக்கரத்தினிடத்தும், மொழித் தலைவியாகிய பாரதியின் திருக்கையினும் புத்தகம் விளங்கியிருந்ததென்று நாம் அறிகின்றோம். மேனாட்டவர் "இறகினால் எழுதப்பெற்றமையால் புத்தகம் என்று பேரிட்டனர் என்று சிலர் கூறுகின்றனர். ஆனால் வரிவடிவாக எழுத்துக்கள் பயிலப்பட்டு வந்த நாள் முதலாகப்புத்தகங்களும் பல்கிவந்தன என்பது பொருத்தமாகும்.

புத்தக வகை.

பண்டைக் காலத்தில் ஏட்டுப் புத்தகங்களும், கையாலெழுதப்பட்ட காகிதப் புத்தகங்களுமிருந்தன. பனையோலையிலும், கூந்தற்பனையோலையிலும், மிகுதியாக எழுதி வந்தனர். சில அரிய நூல்கள் செம்புத் தகட்டினும் முன்னையோர் எழுதி வைத்திருந்தனர். காகிதஞ் செய்யும் முறை கையாண்டு வந்தபின் காகிதத்தில் எழுதிய புத்தகங்கள் உண்டாயின. கல் அச்சென்று ஒன்று தோன்றிற்று. காகிதத்தில் அச்சிட்ட புத்தகங்களும் வெளியாயின. "பெஞ்சமின் பிராங்கிலின்" என்பவர் அச்சுப்பொறியை அதிக உபயோகத்

திற்குக் கொண்டுவந்தார். சீனவிலும் அச்சு எழுத்துக்கள் சீனவாசிகளால் விருத்தியாக்கப் பெற்றன என்று சரித்திர வாயிலானே தெளியக்கூடும்.

### புத்தகத்தின் அவசியம்.

கல்விபயிலும் மாணுக்கர்களுக்கும், கற்ற அறிஞர்களுக்கும், பிற்காலம் வித்தை பயில்வாருக்கும் பிறரெல்லாருக்கும் புத்தகம் ஆவசியமானதாகும். புத்தகம் இன்றிக் கற்கப்புகுவது கோலின்றிக்கண்ணிலான் நடக்க முயன்றதைப்போலும். ஆகலின், புத்தகம் யாவருக்கும் இன்றியமையாச் சாதனமானது என்பது வெளிப்படையாகும்.

### புத்தகம் பரவிய தன்மை.

புத்தகங்கள் எழுத வல்லவர்களால் அரிய நூல்கள் பலப்பல எழுதப்பட்டன. அவைகள், நந்தமிழ் நாட்டினன்றி கிரேக், பாபிலோன் முதலிய நாடுகளிலும் சென்று பரவின என்பர். வேதப் புத்தகப் பிரதிகள் ஜர்மன் தேசத்துள்ள புத்தகசாலையிலிருப்பதாகவும் நாம் அறிகின்றோம். ஒருவர் ஒரு புத்தகத்தை வைத்திருந்தால், மற்றொருவர் அதனைப் பார்த்து வரைந்துகொள்ள அநுமதி கொடுப்பதாலும் புத்தக வளர்ச்சியும் எங்கும் பரவுதலும் உண்டாயின. அச்சுப்பொறியினுதவியால் புத்தகம் அதிகமாய்ப் பரவிற்று.

### புத்தகத்தின் தற்கால நிலை.

தற்காலம் புத்தகங்களை மிக மிக எளிதாகவும், விலைக் குறைவினும் பெறலாம். நூறு, ஐம்பது என்று பணங்கொடுத்து, உயிர், மெய், உயிர்மெய் என்ற எழுத்துக்களின் பேதந்தெரியாது பெறற் பாலனவாகிய ஏட்டுப் புஸ்தகங்களை இப்போது ஐந்து, பத்துஎன்ற ரூபாத்தொகையில் பெறலாம்.

காரணம் அச்சுப்பொறி வந்து மலிந்ததேயாம். உதாரணமாக சிந்தாமணியை எடுத்துக்கொள்வோம். சிந்தாமணியை எழுத ஒருவருடமும் செலவு நூறுரூபாவுக்கு மேலும் செலவாகும். ஒரு பிரதியைத்தான் பெறலாம். இப்போது மஹாமஹோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் பெருமுயற்சியால் பத்து ரூபா செலவில் திருத்தமான ஒரு புத்தகம் பெறக் கூடியதாகயிருக்கின்றது. இதேபோல, ஏனைய இலக்கிய, இலக்கண, ஞான நூல்களெல்லாம் கிடைக்கின்றன.

ஏழைகளும் புத்தகம் படிக்கலாம்.

மேலை நாடுகளிலே புத்தகங்கள் அதிகரித்தன. ஐந்து மைல் வரையும் நீண்டு செல்லும் புத்தகசாலைகளையும் தாபித்தனர். புத்தகசாலைகளில் இலவசமாகப் படிக்கக்கூடிய ஏற்பாடு இருக்கின்றது. நமது தமிழகத்தில் இலவசவாசகசாலைகள் சிற்சில இடங்களிலிருக்கின்றன. நகரங்களில் மட்டும் வாசகசாலை இருந்தாற்போதாது கிராமங்கள் தோறும் புத்தகசாலைகள் இருத்தல் வேண்டும். சென்னை இராஜதானிப் புத்தகசாலை மிக நலம் விளைக்கின்றது. தஞ்சையில் சரஸ்வதி மால் என்பதில் பழைய ஏட்டுச் சுவடிகள் சேகரித்து வைக்கப்பெற்றிருந்தன. யாவரும் போய்ப்படிக்கும் வழியமையவில்லை என்று கருதுகின்றேன்.

மதுரையில் நான்காந் தமிழ்ச் சங்கத்தாபகராகிய கனம் பாண்டித்துரைத்தேவரவர்கள் "பாண்டியன் புத்தகசாலை"யைத் தாபித்தார்கள். அதில், தற்காலவிய லறிவிக்கும் புதினத் தாள்களும் அரிய நூல்களும் நாடோறும் படித்துப் பயன்பெறுவார் பலர். இச்சங்க உதவித்தலைவராகிய, கௌரவ ஸ்ரீ டி. வி. ஸ்ரீநிவாஸையங்காரவர்கள் செந்தமிழ்ப் பரிபாலன சீலராயும், செந்தமிழறிஞராயும், சமபுத்திவாய்ந்து யாவரையும் ஆதரிப்பவராயுமிருப்பதை நான் இங்கே குறிப்பிடாமலிருக்க முடியவில்லை.

### தமிழ் மக்கள் கடமை.

இத் தென்னுட்டில் தமிழ் மக்கள் யாவரும் புத்கப் புதிய அறிவைப் பெறப் புத்தகசாலைகளை வேண்டும். புத்த கங்கள் தொகுக்கும் முறையை மேனுட்டவரிடமிருந்துதான் பயின்று கொள்ளவேண்டும். அவர்கள் நம் நாட்டு மொழி நூல்களில் அச்சிடப்படும் பிரதிகளை மிக மதித்து ஒவ்வோர் பிரதி தங்கள் நாட்டுக்கு எற்றித் தொகுத்து வைக்கின் ருர்கள். நாமும் நமது நாடுகளில் தமிழ் மொழியன்றி, ஏனைய மொழிப் புத்தகங்களையும் எற்ற பெற்றி சேர்த்து வைப்பதும், ஒற்றுமையுடன் வாசகசாலைகளால் நலம் புரிவதும் முக்கிய கடமையாகும்.

### புத்தகக் கோடை.

புத்தகங்களை மாணுக்கருக்கோ, அன்றி நண்பர்களுக்கோ பரிசாக அளிப்பது நன்று. ஞான நூல்களைக் கொடுத்தல் ஞானதானம் எனப்படும் உயரறமாகும் என்று பெரியோர் புகன்றனர்.

### புத்தகப் பயன்.

இதுவரையுங்கூறிய சில வாக்கியத் தொடைகளினுலே, புத்தகங்கள் நீண்டகால வழக்கினுள்ளன என்பதும், புத்தகத்தினுல் யாவரும் பயன்பெற்று வருகின்ருர்களென்பதும், இன்னும் புத்தகங்களினுலே நாம் அறிவு வளர்ச்சியாகிய பயனைப்பெறத் தளர்ச்சியின்றி முயற்சி கொள்ளவேண்டும் என்பதும் அறியக்கூடியனவாகும். ஆகவே, புத்தகப்பயன் அறிவு வளர்ச்சியேயென்றும், அறிவின் மேம்பாடு கருதினுர் யாவரும் புத்தகத்தை தமது உயிர்த்தோழனுகக் கொள்ள வேண்டும் என்றும், வடநூல்—ஆங்கில நூல்களின் மொழி

பெயர்ப்பு நூல்களும் நமக்கு உற்ற துணையாவன என்றும் அறிந்து, செயலளவில் முன்னேற்றம் பெறச் செய்தல் வேண்டும்.

மொழிபெயர்ப்புப் புத்தகம்.

செந்தமிழில் இயன்ற அரிய ஐம்பெருங் காப்பியங்களும், தொல்காப்பிய முதலியனவும், திருக்குறளும் நமது அறிவைத் திகழச்செய்யும் பெருநூல்களாய் நிலவுகின்றன. இவற்றினால் அடைந்த—அடையும் பயனை வரையறுத்துக் கூற எழுத்திலடங்குவதன்று. மொழிபெயர்ப்பு நூல்களும் அன்ன தகுதி மன்னியனவே.

சுக்கிரநீதி என்ற அரிய வடமொழி நீதி சாஸ்திரம், பண்டிதமணி திரு; மு. கதிரேசச் செட்டியார் அவர்களால் பெயர்த்து உதவப் பெற்றிருக்கின்றது. விஞ்ஞான நூற் கருத்துச் சிவணிய மதங்க சூளாமணி என்னும் நூலைச் சிறந்த தமிழில் சுவாமி விபுலானந்தரவர்கள் நமக்கு அளித்தார்கள். ஆதலின் மொழிபெயர்ப்பு நூல்களும் புத்தகரூபமாக நமது கழகங்களினும், பொது மன்றங்களினும் நிறைத்து வைக்கற்பாலனவாம். இதுவரையிற் காட்டியவற்றிலுள்ள குற்றங் களைந்து குணமளைந்து அங்கீகரிக்க வேண்டி இதனை நிறைவு செய்கின்றேன்.

செந்தமிழ் மாது செழித்து வாழ்க.



# இது ஒரு புகழ்ப்பெற்ற கட்டுரை.

——:0:——

"சோதரர் முத்துராமன் அவர்களின் கட்டுரை மிகமிகச் சிலாகிக்கத் தக்கது. எடுத்துக்கொண்ட விஷயத்தை சிறிது அதிகமாக எழுதப்பட்டிருப்பதே அக் கட்டுரையை விட்டு வேறு ஒன்றைத் தெரிந்தெடுக்கக் காரணமென்று நினைக்கிறேன். எனது கட்டுரை மிக மிகச் சாமானியமே தெய்வச் செயலாக அது தெரிந்தெடுக்கப்பட்டது" என முதற்கட்டுரையாளர் "பாரதி வாசகசாலை"க் காரியதரிசி சுப. மு. கண்ணப்பர் அவர்கள் லெ. முத்துராமன் கட்டுரையைப்பற்றி புகழ்ந்து எழுதியுள்ளார்.

முக்கியக்குறிப்பு:—

"வாசகசாலையார், கட்டுரைப் போட்டிபற்றி வெளியிடும் போது, எழுதுவோர்க்கு எவ்வித நிபந்தனையும் சொல்லவில்லை என்றும், அவரவர்கள் மனோதர்மப்படி எழுதலாமென்றும் கூறப்பட்டிருந்தபடியால்" சிறிது அதிகமாக எழுதினேன் என்று லெ. முத்துராமன் குறிக்கின்றார்.

"பாரதி வாசகசாலை"

காரியதரிசியால் புகழப்பெற்ற

# லெ. முத்துராமன்

கட்டுரையின் சாரம்.

---

குழந்தைகள் பிறக்கும்போது ஒன்றையுமே அறிவதில்லை. தளகர்த்தர்களது சின்னங்களோடோ அல்லது ஞானிகளின் உயர்ந்த நினைவுகளோடோ பிறப்பதில்லை. காலக்கிரமத்தில் ஒருகுழந்தை தாய் முகத்தைப் பார்த்துப்பார்த்து தாய் பேசும் தொனியைக் கேட்டுக்கேட்டு உலகுடன் பழக ஆரம்பிக்கின்றது. தேகப்பழக்கத்துக் கொத்தவிதம் உடம்பு வளம் பெற்று வளருவதே போல், மனப்பழக்கத்துக்கொத்த விதம் அறிவும் வளம்பெற்று வளருகின்றது. மனதைப் பண்படுத்தி அறிவுடையோராகச் செய்வதற்கே தக்கவயதில் சிறுவர்கள் பள்ளிக்கு அனுப்பப்படுகின்றார்கள். பள்ளியில் அவர்கள் அறிவு வளர்ச்சிக்குத் துணைக்கருவியா யிருப்பது ஏடுகள் - சுவடிகள் - புத்தகங்களே. புத்தகங்கள் என்றால் என்ன? நமது மக்கள்குலம் நீண்டகாலமாக அறிந்து-அநுபவித்து வந்த மாபெரும் உண்மைகளை வரைந்து வைத்திருப்பதே புத்தகங்களாகும். உயர்ந்த அறிவுபெற்ற ஒருவர் உலகினின்றும் மறைந்துவிடுதல் கூடும். ஆனல், அவர் வாழ்

நாளில் மக்கள் குல நன்மைபற்றிக் கூறிய அழகிய கருத்துக்கள், உயர்ந்த நீதிகள் முதலியன மறைந்துவிடக் கூடாதென்பது கருதியே அக்கால மக்கள் தாம்தாம் கண்டுபிடித்த உண்மைகளைப் புத்தகங்களாகச் செய்துவைக்கத் தலைப்பட்டனர். ஒருவரின் மதி நுட்பத்தைத் தன்னுடன் கொண்டு சென்றுவிடாமல், பிற்கால மனிதவர்க்கத்திற்கு உபயோகமாகும்படி செய்யச்சிறந்த சாதனமாயிருப்பது புத்தகமே. இம்மாதிரி, மக்கள் நீண்டகாலமாக அறிவின் அடையாளத்தைப் புத்தகமாகச் செய்துவைத்திருக்கின்றனர். இன்று உலகில் தோன்றியிருக்கும் அறிஞர்களெல்லாம் புத்தகங்களின் பயனுய்த் தங்கள் அறிவைப்பண்படுத்திக்கொண்டவர்களே. ஆதிகாலமக்கள் தங்கள் அறிவின் நுட்பங்களைப் புத்தகங்களாக்கிவைக்க எவ்வளவோ சிரமப்பட்டிருப்பார்கள் என்பது உண்மை. மனிதகுலம் தோன்றிய எவ்வளவோ காலத்திற்குப் பிறகு, இன்றுள்ள நிலையில் நல்ல முறையில் நமக்குப் புத்தகங்களாக்கித் தரப்பட்டிருக்கின்றன. முற்கால மக்கள் தங்கள் அறிவின் நினைவைக் கல்லிலும் செம்பிலும் எழுதிவைத்தார்கள். தற்காலமக்கள் ஓலையில் வரைந்து, இப்போது கடிதத்தில் எழுதிவருகின்றார்கள். வேதங்கள், சாஸ்திரங்கள், புராணங்கள், இதிகாசங்கள், கதைகள் யாவும் மக்கள் மனதிற் தோன்றியெழுந்தஅறிவின் கற்பனைசக்தியும் அநுபவங்களுமேயாம் என்று தயங்காமல் கூறலாம். அல்லாமல், புத்தகங்களை ஞாபகத்தின் சின்னம்-மறைவின் திறப்பு-அறிவின் தூண்டுகோல் என ஐயமறச்செப்பலாம். ஆகவே, புத்தகங்களின் பயன் மிக மிகப் பெரியது.

அறிவு வளர்ச்சிக்குக் கல்வி எவ்வளவு அவசியம்என்று கூறத் தேவையில்லை. கல்வி என்பதற்கு அறிவு, கற்றல்,

நூல், வித்தை என்பன போன்ற வாக்கியங்களின் ஒற்றுமைத் தொடர்பினாலேயே நூற்களின் பயன் நன்கறியப்படும். ஒரு சிறுவன் பள்ளியில் நுழைந்ததும் சுவடிமூலமே பயிற்சி பெறுகிறான். 'ஆப்ரகாம்லிங்கன்' என்பார் படிப்பின்மூலமே புகழ் பெற்றார். ஆஸ்குவித், லாயிட் சார்ஜ் ஆகியவர்களும் தங்கள் ஜீவியகாலத்தில் கற்ற கல்வியின் பயனாகவே பெரியபெரிய காரியங்களைச்செய்து முடித்தனர். "கௌண்ட் ஒக்குமா" என்பார் எதைச் செய்து முடித்தாரோ அதற்கு உதவியளித்தது அவர் கற்ற கல்வியேயாகும். ஆகவே, இவைகளுக்கு அநுகூலமாயிருந்தவை புத்தகங்களே.

இவர்களைப் போலவே தாதாபாய் நௌரோசி, திலகர், காந்தியுமாவர்; கௌதமபுத்தர், அசோகர், சந்திரகுப்தா, சமுத்திரகுப்தா, ஷேர்ஷா, அக்பர், ஜிவாஜி போன்றவர்களும்; கம்பன்- காளிதாஸன் போன்றவர்களும் கல்வியின் மேன்மையினாலேயே சிறப்புப் பெற்றார்கள். இத்தகைய அறிவையும் அநுபவத்தையும் இவர்களது பெற்றோர்கள் ஒரு குவியலாகச்சேர்த்து அப்படியே அவர்களது உடம்பினுள் நுழைத்தார்களில்லை. அவர்கள் கற்ற நூல்களே அதற்குக் காரணங்களாயிருந்தன. எனவே, புத்தகங்களின் பயன் மிக மிகச் சிறந்தது.

வானசாஸ்திரம், பூமிசாஸ்திரம், இயந்திரசாஸ்திரம், கணிதசாஸ்திரம், நீதிசாஸ்திரம், வேதாந்தசாஸ்திரம், சித்தாந்தசாஸ்திரம், சிற்பசாஸ்திரம், சங்கீதசாஸ்திரம், தாவரசாஸ்திரம் முதலான சகலசாஸ்திர கலைஞானங்களும் இன்று உலகில் புத்தகங்களாகவே யிருக்கின்றன. இதன் உதவியின்றி இவைகளை எளிதிற் கற்க முடியுமாவென்று சிந்தி

யுங்கள்! நமது முன்னோர்கள் தங்கள் ஆராய்ச்சிகளையும், அநுபவங்களையும் புத்தகங்களாகச் செய்து வைத்திராவிட்டால் மக்கள் குலம் இற்றைய நிலையை ஒருபோதும் அடையமுடியாது. அல்லாமல், அறிவு வளர்ச்சிக்கான உபகரணங்கள் எதுவுமின்றி விலங்கினுங்கேடாய் அழிந்தொழிந்திருப்பர் என்பது உண்மை. ஆகவே, புத்தகங்கள் பெரிதும் பயனுடையன வென்பது உண்மையினும் உண்மை.

எல்லாவிதமான தர்மங்களையும் ஒழுங்குகளையும் புத்தகங்களில் காண்கிறோம். சகலவிதமான ஞானங்களையும் புத்தகங்களின் மூலம் உணருகிறோம். அபாரமான தைரியத்தையும் புத்தியையும் அடையப் புத்தகங்கள் வழிகாட்டி இருக்கின்றன. அரசர் பதவிக்கும் அப்புத்தக அறிவு உதவிசெய்திருக்கின்றது. அமரர் பதவிக்கும் அவைகளே அநுகூலம் செய்திருக்கின்றன என்றால் புத்தகங்களின் பயன்பற்றிப் பேசவும் வேண்டுமோ?

நூற்களால் கற்றோரும் மற்றோரும் அடையும் பயனுக்களவில்லை. "புத்தகங்களின் தொகுதியே பல்கலைக் கழகம்" என்றார் கார்லைல். ஓர் சிறிய அறையிலுள்ள எல்லையில்லாச் செல்வமே புத்தகங்கள். இச் செல்வத்தைப் பயன் படுத்த வேண்டுவது நம் தனிப்பெருங்கடன். காசுக்காக மனிதன் ஓடி ஓடி அலைகிறான். பண்டைப் பெரியார்களின் அமுத மொழிகளை—பொன்மொழிகளை ஓடித்தேடி உணர்கிறானா? "அம்மொழிகள் பல்லாயிரம் வருடங்களாகப் பெருகிய மதிப்புடன் மிளிருகின்றனவே" என்று கரைகிறார் தேரோ கையில் கோலின்றியும், கடுமுகம் சுடு சொல்லின்றியும் நமக்

குக் கல்வி புகட்டும் போதகாசிரியர்களே புத்தகங்கள். தற்கால ஆசிரியர்கள் சோம்பித் தூங்குவதேபோல், கற்பதற்குப் புத்தகங்களிடம்போனால் அவைகள் தூங்கிக் கொண்டிருப்பதில்லை. ஆராய்ச்சிசெய்தால் அவைகள் ஒன்றையும் ஒளிப்பதில்லை மாறுபாடான பொருள் கொண்டு விட்டால் அதற்காக அவைகள் கோபிப்பதில்லை. நம் அறிவின் கீழ்மையை நோக்கி அவைகள் சிரிப்பதில்லை. இத்தன்மை வாய்ந்த நூற்களின் பெருமையை என்னென்றியம்புவது!

காலஞ்சென்ற மேதாவிகளை யெல்லாம் தட்டி யெழுப்பி உரையாடும் வன்மை நமக்குண்டு. கண்ணகியைப் பற்றியும், சேரன் செங்குட்டுவனின் வடநாட்டுப் படையெடுப்பைப் பற்றியும் இளங்கோவடிகளிடம் வினவலாம்; கம்பனைத் திறந்து காவிய இன்பத்தைப் பருகலாம்; குடும்பப்பிணக்கு, அறநெறியின் ஐயம், அரசியற்சிக்கல் முதலிய எந்த வழக்கையும் வள்ளுவன் என்னும் நீதிபதியிடம் கொண்டுபோகலாம்; புத்தகங்களுள் பலகாலத்தினரையும் பலநாட்டாரையும் காணலாம்; அரசியலுலகில் தலைசிறந்தவர்களையும், போர்க்களத்தில் பெரும் புகழ் படைத்தோர்களையும், பண்டையச் செய்திகளையும், சான்றோரின் வாழ்க்கை வரலாறுகளையும், நீதிபதிகளையும், வழக்கறிஞர்களையும், பண்டிதர்களையும், பாமரர்களையும் புத்தகங்களில் பார்க்கலாம்; இயற்கைத் தேவியின் நுணுக்கங்களையும், சீரானவாழ்வை நடாத்தும் வழியையும், புத்தகங்களில் கண்டு களிக்கலாம்; புத்தகங்களால் கவலையை நீக்கி மகிழ்ச்சியை அடையலாம்; புண்பட்ட மனத்திற்கு ஆறுதலும் அளிக்கலாம்; ஐந்தையடக்கிக்

கடவுளைக்காணவழிதேடலாம்; இன்னோரன்ன போதனைகள் பலவும் புத்தகங்களில் அடங்கிக் கிடக்கின்றன. சுருங்கச் சொல்லின் கல்விக் களஞ்சியத்தின் வாயில்கள் புத்தகங்களே!

நூல்களின் உயர்வைப் பற்றியும், உலகிற்கு அவைகளின் உபயோகங்களைப் பற்றியும் எவ்வளவு எழுதினும் பொருந்தும். அவைகள் இல்லாவிட்டால் இற்றை நாள் உலகம் இப்படி இருக்காது. ஆதிகாலத்திலிருந்து நமது இந்திய தேச சரித்திரம் ஒழுங்காய் வைக்கப்பட்டிருப்பின் நமது நாட்டின் பண்டைய நாகரீகத்தைக் கண்டு உலகமே இப்போது தலைவணங்கி நிற்கும். ஆயினும், நமது பண்டைய நூற்கள் இல்லாவிட்டால் இன்று இந்தியா சூன்யமாகவேயிருக்கும். ஆத்மீக நூற்களால்தான் இந்தியா இப்பொழுதும் போற்றப்படுகிறது. இந்து, முஸ்லீம், புத்த, சீக்கிய, கிறிஸ்துவ மகான்கள் யாவருடைய மகிமைகளையும், மக்கள் பரம்பரைகளையும் அறிவதற்குப் புத்தகங்களே பெரிதும் உதவி வந்திருக்கின்றன. உலகமக்கள் ஆலோசிப்பதற்கு புத்தகங்கள் வசதியளித்திருக்கின்றன. நமது பண்டை இந்தியாவின் பெருமைக்கு நமது தபோதனர்கள் எழுதி வைத்த புத்தகங்களே காரணம் என்று சொல்லலாம். ஆகவே, மக்கள் நினைத்து, பேசி, எழுதிவந்த விஷயங்களே புத்தகங்கள்.

கவிச்சக்ரவர்த்தி. ஷேக்ஸ்பியரது கவிகளால் இங்கிலாந்து புதிய உணர்ச்சியை அடைந்திருக்கிறது. பெர்னுட் ஷாவின் எழுத்துக்கள் நவீன நாகரீகம் முதிர்ந்த ஜனங்க

ளுக்கு இப்பொழுது எவ்வளவோ எச்சரிக்கை செய்து கொண்டிருக்கின்றன. மேல் நாட்டில் ஏராளமான புத்தகங்கள் எழுதப்படுகின்றன. அதனால் புதுப்புது இயக்கங்களையும் உணர்ச்சிகளையும் உண்டாக்கி உதவிக்கொண்டிருக்கின்றார்கள். வாழ்க்கை நலத்திற்குப் புத்தகங்கள் அவசியமென்று அங்குள்ளார் பொதுவாகக் கருதுகிறார்கள். அதனால் புத்தக ஆசிரியர்கள் அங்கு பெருகி வருகிறார்கள். புத்தகங்களும் பெருகிக்கொண்டிருக்கின்றன. அதற்கு ஆதரவும் அங்கு அதிகம். புத்தகம் எழுதுவதையே தொழிலாகக் கொண்டிருப்போர் பலர். புத்தக ஆசிரியர்களை அத்தேசங்கள் மதிக்கின்றன. பெரிய பிரபுக்கள் கூட புத்தகங்கள் எழுதி பெறும் நிதியை மக்கள் நலத்திற்கு உதவுகின்றனர். 1924-ம் வருடத்தில் பல்கேரியா, ஸூகோசுலோவேகியா டென்மார்க், பிரான்ஸ், கிரேட்பிரிட்டன், ஹாலண்டு, ஹங்கேரி, இத்தாலி, ஜப்பான், நார்வே, ஸ்பெயின், ஸ்வீடன், ஸ்விட்ஜர்லாண்டு, அமெரிக்க ஐக்கியமகாணங்கள், ஜெர்மனி முதலிய தேசங்கள் 99287 புத்தகங்களை வெளியிட்டிருப்பதாக அறிகிறோம்.

நமது பரதகண்டத்தின் நிலை இப்பொழுது இது விஷயத்தில் எப்படியிருக்கின்றது? எழுச்சியான புத்தகங்கள் எதுவும் எழுதப்படவில்லை. சில எழுதுவதும் மறைகின்றன. ஆகவே, தேசத்தில் பற்பல எழுச்சிகளை உண்டாக்கத்தக்க அநேக அரிய நூற்கள் நமக்குத்தேவை. விவேகானந்தர், பக்கிம்சந்திரசட்டார்ஜி, நோபல் வெகுமதி பெற்ற ரவீந்திரநாத்தாகூர், அறிஞர் போஸ், ஆசிரியர் ராய், கவியரசி

சரோஜினி, அரசியல் ஞானி லஜபதிராய், மகாத்மா, பேராசிரியர் ராமன், யோகி அரவிந்தர், கணிதசாஸ்திரி ராமாநுஜம் போன்ற பெரியார்களது புத்தகங்களால் தற்போது இந்தியாவுக்கு நன்மை ஏற்பட்டு வருகிறதென்பது உண்மை. தென்னுடாம் செந்தமிழ் நாட்டில் புகுந்தால், சிலப்பதிகாரம்-மணிமேகலை போன்ற பழம் உயர் நூற்களைத் தவிர, வேதநாயகம் பிள்ளை, மாதவய்யா, கோபாலகிருஷ்ணன், ஆறுமுகநாவலர், சூரியநாராயண சாஸ்திரியார், வேதாசலம், கலியாணசுந்தர முதலியார், மாணிக்க நாயகர், சாமிநாதய்யர், சேதுப்பிள்ளை, நமச்சிவாய முதலியார், வையாபுரிப்பிள்ளை பாரதியார் போன்ற அறிஞர்கள் தோன்றி தமிழ் நடையை அழகுபடுத்தியிருக்கிறுர்கள். ராமலிங்க சுவாமிகள் அமிர்தப்பாக்களால் சமரசத்தை உண்டாக்கியிருக்கிறுர்.

நம் நாட்டுப்புறங்களில் ஒதுங்கிய விடங்களிலுள்ள அறிவாளிகளை நாம் மதிக்காமலிருக்கிறேம். கானகத்தில் எத்தனையோ வாசனையுள்ள அழகிய புஷ்பங்கள் அறிவாரற்று—அநுபவிப்பாரற்று, வாடி-வதங்கி, உதிர்ந்து—உலர்ந்து, உக்கி மண்ணேடு மண்ணுய்ப் போவது போல், எத்தனையோ பெரியார்கள் நம்மிடையிருந்தும் நாம் அறியாமலிருக்கிறேம். நாட்டில் ஆதரவில்லாதபடியால் எத்தனையோ வல்லுனர்கள் தாங்கள் எழுதிவைத்த சுவடிகளை அச்சுக்குக் கொடுக்கவும் முடியாத நிலையிலிருக்கின்றனர் ஆதரவிருந்தால் பற்பல வகையான நூற்கள் ஓரளவு தோன்றியிருக்கும். நமதருகேயுள்ள ஆந்திரமும், மலையாளமும் எழுச்சியுள்ள நூற்களை உண்டாக்கிக்கொண்டிருக்கின்றன. கம்பர், புகழேந்தி, ஒட்டக்கூத்தர், வள்ளுவர் போன்றவர்கள் கிராமங்களில் பிறந்த

சாதாரண மனிதர்களே. உதவியிருக்குமாயின் ஒவ்வொரு கிராமங்களிலிருந்தும் எத்தனையோ வகை வல்லவர்கள் உண்டாகி ஏராளமான புத்தகங்களை எழுதிக்குவித்து நாட்டிற்கு நலன் செய்திருப்பார்கள். நமது நாட்டில் அறிவுப்பசி உண்டாயிருக்கிறது. தமிழர்களுக்கும் அப்பசி அதிகரித்திருக்கிறது. அதைத்தணிக்கப் புத்தகங்களாகிய உணவு தேவை. எத்தேசம் அறிவாளிகளைப் போற்றவில்லையோ, எத்தேசம் உண்மையாளிகளை மதிக்கவில்லையோ, எத்தேசம் உயர்நூற்களை ஆக்கவில்லையோ, எத்தேசம் ஆக்கிய நூற்களை ஆதரிக்கவில்லையோ அத்தேசம் அதிசீக்கிரத்தில் சீர்குலைந்து நாசமடையும். இதனை இப்போது நாம் அறிந்து வருவதால் வருங்காலத்தில் புத்தக அபிவிருத்திக்கு ஆதரவு உண்டென்னும் நம்பிக்கை நமக்குண்டாகிறது.

கலைகளைப்பற்றிக் கணக்கற்ற நூற்கள் நமக்கு வேண்டும். தேர்ச்சியடைந்துள்ள தொழில்களைப் பற்றியெல்லாம் புத்தகங்கள் வெளிவருதல் வேண்டும். கலைஞானத்தைப் பற்றிய புத்தகங்கள் நமக்கு ஏராளமாய் வேண்டியிருக்கின்றன. கலைகளைப்பற்றிய நூற்கள் தமிழில் இல்லை என்ற பெருங்குறை அகற்றப்படவேண்டும். மறைந்து மறந்து கிடக்கும் அரிய வீரர்களுடைய அருமைச்சரித்திரங்களையும் தேசச்சரித்திரங்களையும் நல்ல ஆராய்ச்சியுடன் தக்கபடி எழுதுதல் வேண்டும். உயிருள்ள பாக்கள் பல கொண்ட சுவடிகள் வெளிவரவேண்டும். சுகாதாரத்தைப்பற்றி அதிகமாய் எழுதப்பட்ட ஏடுகள் வேண்டும். சிகிச்சைகளைக் காட்டினும் நோய் வராமற் தடுக்கும் முறைபற்றிய புத்தகங்கள்

நன்கு தோன்ற வேண்டும். மருந்தில்லா இயற்கை வைத்தியத்தை மிகமிக முக்கியமாய் மக்கள் கவனத்திற்குக்கொண்டுவரக்கூடிய நூற்கள் நமக்கு அதிகம் வேண்டும். இலக்கண நூற்களும் இலக்கிய நூற்களும் தமிழில் ஏராளமாய் இருக்கின்றன. மொழிப்பற்று உண்டாக்கக்கூடிய நூற்களை, இலகுவான—இனிய—கவர்ச்சியான நவீன நடையில் நூதனக் கருத்துக்களுடன் வெளியிடவேண்டும். மாஜினியை மதித்து, வாஷிங்டனை வாழ்த்தி, கரிபால்டியை கௌரவித்து, இந்தியாவின் இந்நாள் இழிநிலையை எண்ணிப் பார்த்து நூற்கள் எழுதவேண்டும். கதாசிரியர்கள், நாடகாசிரியர்கள், சரித்திராசிரியர்கள், கவிவாணர்கள், சீர்திருத்தக்காரர்கள், கலைஞானிகள், பாடசாலைப் புத்தகாசிரியர்கள், பண்டிதர்கள், சன்மார்க்க சமரசக் கொள்கையினர், ஆசிரியைகள் யாவரும் சக்கை போன்ற சாரமற்ற நூற்களை எழுதிக் குப்பைகள் போலக் குவிப்பதில் பயனில்லை. உபயோகமுள்ள, சத்தான, சரியான, நெடுங் காலத்திற்கு உபயோகமான புத்தகங்களே நமக்கு வேண்டும். இதனால் புத்தகங்கள் பயனுடையது என்று தெரிந்து கொண்டோம். அதனைப்பெருக்க, படித்துணர நாடெங்கும் பிரசாரம்செய்தல் வேண்டும். அதற்குச் சேமநிதி வேண்டும். அதற்குப் பாதுகாப்புச் சங்கங்கள் வேண்டும். ஒழுங்கும்—யோக்கியமும்—பொறுப்பும் வாய்ந்த நிர்வாகஸ்தர்கள் வேண்டும். இதற்குப் பிரபுக்கள் ஆதரவு ஏராளமாய் வேண்டும். இதற்கான தக்க முயற்சிகள் ஒன்றும் செய்யாமல் புத்தகங்களைப் பெருக்கிக்கொண்டு போவதிலும் பயனில்லை. ஏழை இந்தியர்கள் பசிப்பிணியினின்றும்

காக்கப்பட்டால் இவ்வியக்கம் நன்கு வளரும். எனினும், வசதியுள்ளோரும் இதுபற்றி அலட்சியம் செய்து வருகிறார்கள் என்றால் அதற்கு நாம் வருந்தாமல் வேறென்ன தான் செய்யமுடியும்.

மேலைநாட்டார் புத்தகங்களின் பயனை நன்குணர்ந்து வேலை செய்கின்றனர். அமெரிக்காவே புத்தகங்களைச் சேகரிப்பதில் முனைந்து வேலை செய்கின்றது. அறிவு வளர்ச்சிக்குச்சாதனங்களாயிருப்பவை புத்தகங்களே என்று கருதி, அவைகளைச் சேகரித்து, அதற்கான ஆலயங்களை ஏராளமாய் உற்பத்தி செய்து வருகின்றனர் அமெரிக்கர். இன்று அமெரிக்காவில் 20000-க்குக்குறையாத புத்தகசாலைகள் இருப்பதாகக் கணக்கெடுத்திருக்கின்றனர். முறையே 1826-1840-ல் அங்கு தோன்றியுள்ள தர்க்கவாத சங்கமும், கலையாராய்ச்சிக் கழகமும் இப்புத்தகசாலைகள் தோன்றக் காரணங்களெனலாம். இப் புத்தகசாலையிலுள்ள புத்தகங்களைப் பொதுச் சனங்கள் உபயோகிக்கும்படி செய்திருக்கின்றனர். சர்க்காராலும், நகரபரிபாலன சபையாராலும் புத்தகசாலைகளுக்கு அங்கு பொருளுதவி ஏராளமாய்ச் செய்யப்படுகின்றது. இவ்விஷயத்திற்குப் பொருளுதவி செய்யவேண்டுமென்ற சட்டத்தையும் துரைத்தனத்தார் அங்கு செய்திருக்கின்றனர் பொருளுதவி பெற்ற புத்தகசாலைகள் ஒழுங்காய் வேலை செய்து வருகின்றனவா என்பதுபற்றிக் கவனிக்க மேற்பார்வைச் சங்கம் ஒன்றும் இருக்கின்றது. இவ்வாறு அங்குள்ள பொதுச்சனங்கள் செய்த முயற்சியின் பயனாக ஊர்கள்தோறும் புத்தகாலயங்கள் இருக்கின்றன.

இது தவிர, அமெரிக்காவில் அநேகம் புத்தகசாலைகள் மாளிகைகள் போன்று இருக்கின்றன. அங்கு புத்தகங்களைச் சேகரிக்கும் இயக்கத்திற்குப் போஷகராயிருந்தவர் ஆண்டுரூ கார்னிஜி என்னும் கோடீசுவரர். அவரிடம் உதவி பெருத புத்தகசாலைகளே அங்கு இல்லை எனலாம். அவர் சிறுவயதில் கிராமப் புத்தகசாலை ஒன்றில் படித்து அறிவு முதிர்ச்சி பெற்றவர். அதன் காரணமாகப் புத்தகங்களின் பயனை அவர் நன்கறிந்து கொண்டதால் 2000-ம் புத்தகசாலைகளுக்காக 36-கோடி ரூபாய்களுக்கு மேல் உதவி புரிந்திருக்கிருர். பின்னும் நூல் நிலையங்களுக்கு ஏராளமான உதவியளித்திருப்பதாகச் சொல்லப்படுகிறது. இவரை மாதிரியாகக் கொண்டு அங்குள்ள பிரபுக்கள் புத்தகங்கள் இயற்றுவதற்கும், சேகரிப்பதற்கும், பாதுகாப்பதற்கும் பொருளுதவி செய்ய முற்படலாயினர். மரணசாசனங்களிலும் புத்தக இயக்கத்திற்கென்று அமெரிக்கர் ஏராளமான பொருள்களை எழுதிவைத்திருக்கின்றனர். சஞ்சாரப் புத்தகசாலைகள் கூட அங்குள்ளன. இதனுல் கிராமவாசியும் இருப்பிடத்தினின்றே வாசித்து அறிவு முதிர்ச்சி பெறுவதற்கு வசதி ஏற்படுகிறது. புத்தகசாலைகளுக்கு அவர்கள் ஏற்படுத்தியிருக்கும் சட்டங்கள் வியக்கத்தக்கன. புத்தகசாலைகளுக்குச் சென்று வாசிப்போருக்கு எல்லாவிதத்தும் வசதிகள் செய்து வைத்திருக்கின்றனர். அவைகளை விரிக்கிற் பெருகுமென்றஞ்சி விடுக்கின்றேன். ஆகவே, கல்வித்துறையைப்பெருக்கும் எந்த நாடும் முன்னேறும் என்பதில் ஐயமில்லை.

ஏராளமான புத்தகங்களைச் சேகரித்து ஒரு மாளிகையில் அழகாக அடுக்கி வைத்துவிடுவது மாத்திரம் போதாது

அதனைப் பொது மக்கள் உபயோகித்துப் பயன் பெறும் வகையில் உதவவேண்டும். பொதுமக்கள் படிப்பில் ஆர்வம் கொள்ளத்தக்க முறையில் பிரசாரம் செய்தல் வேண்டும். படிப்பில் ஆசை ஏற்படும் விதம் விளம்பரங்கள், துண்டுப் பிரசுரங்கள் வெளியிடவேண்டும். பிரசங்கங்கள் செய்தல் வேண்டும். போட்டிப்பந்தயங்கள் நடத்துதல் வேண்டும். இம்மாதிரி முறைகளை மேல்நாட்டினர் கையாடுகின்றனர் அமெரிக்கா வாஷிங்டன் நகரிலுள்ள மூன்றடுக்கு மாடிகளைக் கொண்ட தலைமைப் புத்தகாலயம் இருபதுகோடி ரூபாய்கள் செலவின்மேல் கட்டப்பட்டிருக்கிறது. அப் புத்தகசாலை நிர்வாக உத்தியோகஸ்தர்கள் முன்னூறுபேர்கள். அப் புத்தகசாலைக்குத் தனியாகப் பிர்மாண்டமானதோர் அச்சுக்கூடமும் இருக்கிறது. அப் புத்தகசாலையில் 2,138255-புத்தகங்கள் இருக்கின்றன. அதற்கு 900-ம் பத்திரிகைகளும், 6676-மாதசஞ்சிகைகளும் வரவழைக்கப்படுகின்றன. ஏக காலத்தில் 1000-ம்பேர் உட்கார்ந்து படிக்கலாம். பண்டைய நூல்களை ஆராய்ந்து வெளியிடும் சங்கமும் அதன் சார்பில் உண்டு. அவ்வப்போது செய்யப்படும் ஆராய்ச்சிகளைப் பத்திரிக்கைகளாகவும், புத்தகங்களாகவும் அச்சிட்டு, உலகில் முதன்மையான நானூறு நூல் நிலையங்களுக்கு இலவசமாக அநுப்பப்பட்டுவருகின்றன. அப்பேருதவியை நம் தேசத்தில் பம்பாய்—கல்கத்தா—சென்னை ஆகிய மூன்று நகரங்களிலுமுள்ள சர்வகலாசாலைப் புத்தகசாலைகள் மட்டும் பெற்று வருகின்றன என்று அறிகிறோம். புத்தகங்களின் பயன் பற்றியும், அதனைச்சேகரிப்பதுபற்றியும் ஆராய்ச்சி செய்வதற்கு அங்கு மகாநாடுகள் கூட்டப்படுகின்றன. இங்கு என்ன நடக்கிறது? இங்கு பிரசங்கமேடைகளில் கல்வி—கல்வி

என்று கத்துகிறோம். இதுதான் இங்கு நடக்கிறது. "இந்தியாவில் இந்து, மகமதிய, கிருஸ்துவ கோயில்கள் எத்தனையுண்டோ அத்தனை புத்தகசாலைகள் அமெரிக்காவிலிருக்கின்றன" என்று டாக்டர் சுதீந்திரபோஸ் கூறியிருக்கின்றார்.

கி. மு. 6-வது நூற்றாண்டில் புத்தர்பிரான் தோன்றினார். உலகில் மூன்றிலொரு பகுதியினர் தழுவக்கூடிய அளவிற்கு அம்மதத்தினர் பெருகியிருந்தனர். புத்தருடைய உபதேசம், வாழ்க்கை வரலாறுகள் பற்றி பிர்மாண்டமானதோர் நூலினம் இந்நாட்டில் உண்டாகி, புறநாடுகளிலும் பரவத்தொடங்கியது. அந் நூல்களை செம்மைப்படுத்திய தோல்களின் மீதும், ஓலைச்சுருள்களிலும் எழுதிவைத்தனர். ஹீப்ரு பாஷையில் மிகவும் தொன்மை வாய்ந்த புத்தகங்களெல்லாம் கிறிஸ்து பிறப்பதற்கு 600-வருடங்களுக்கு முன் எழுதப்பட்டனவாகும் ஜப்பான் தேசத்திலோ இற்றைக்கு 1000-ம் வருடங்களுக்கு முற்பட்ட காலத்தில் எழுதிய நூற்கள் ஒன்றுமேயில்லையெனக் கூறிவிடலாம். சீனு, கிரீஸ், ஜப்பான் முதலிய தேசங்களில் புத்தகங்கள் எழுத்து வடிவிற் தோன்றுவதற்கு நெடுங்காலம் முன்னிருந்தே வாய் மொழியாக அறிவைப்பரவச் செய்திருக்கின்றனர்.

எழுத்து வடிவத்திலும் புத்தகஉருவத்திலும் நூற்கள் பெருகுவதற்கு நெடுங்கால முன்பே கிரேக்கர்கள் தமிழ் நாட்டுப் பாணர்களைப் போல நாடுமுழுவதும் யாத்திரை செய்து காவியங்களைப்பாடி ஜனங்களை மகிழ்வித்து வந்தனர். தற்காலத்து நாடகக் கூட்டத்தார் ஊரூராய்ப் பிரயாணம் செய்வதேபோல், கிரேக்கபாணர்களும் தேசமுழுவதும் சுற்றி

யலேந்து, அத்தேசத்து ஹோமர் கவியைப் போன்ற புலவர் பெருமக்கள் இயற்றிய அருங்காவியங்களை வெட்ட வெளிக ளிற் பாடி மக்களுக்கு இன்பமூட்டி வந்தனர்.

கலையுணர்விலும் கவிதைச்சுவை நலத்திலும் மிக்க சிறப் புடன் திகழ்ந்த எதென்ஸ் நகரத்தின் கீர்த்தியும் பெருமையும் நாளடைவில் அலெக்ஜாந்திரியா நகரம் அடைந்தது. அத்தே சத்தில் டாலமி என்னும் வமிசத்தைச் சார்ந்த பெரியார்கள் புத்தகங்களைச் சேகரித்துவைப்பதில் மிகவும் சிரத்தையுள்ள வர்களாகயிருந்தனர். அது காலை கிரேக்க பாஷையில் வெளி யான காவியங்கள், இலக்கியங்கள், உலகநூல்கள் என்பவை களை ஒன்று தவறுமல் சேமித்து வைக்க அவர்கள் மிகுந்த பிரயாசை எடுத்துக் கொண்டனர். அலெக்ஜாந்திரியாவில் பண்டை நாட்களிலே பிர்மாண்டமானதோர் புத்தகாலயம் நிறுவப்பட்டிருந்தது. பிரசித்தி பெற்ற அப்புத்தகாலயத்தில் எழுலட்சத்திற்கதிகமான கிரேக்க நூற்கள் அடங்கி யிருந்தனவாம். பிர்மாண்டமான இப்புத்தகசாலையின் ஓர் பகுதியை கி. மு. 48-ம் ஆண்டில் சூலியஸ் ஸீஸர் என்ற மன்னன் தீக்கிரையாக்கியதாகக் கூறப்படுகின்றது.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்குப்பிறகு, இன்றைய தினம் ஆங்கிலக்காட்சி சாலையில் 40-லட்சம் புத்தகங்கள் இருப்பதாகக் கணக்கிடப் பட்டிருக்கிறது.

எகிப்தியதேசத்து எழுத்தாளிகளே உலகத்தில் முதன் முதலாகப் புத்தக வியாபாரம் செய்யும் பெருமை பெறுவதற் குரியவராவர். அவர்கள் ஏட்டுப் பிரதிகளை விலை கொடுத்து

வாங்கி மிகவும் பிரயாசைப்பட்டு அவைகளை பாபரஸ் தாள்க் ளில் தயாரித்து அவற்றை விலைக்கு விற்பது வழக்கம். கிருஸ்து பிறப்பதற்கு 50-வருடங்களுக்கு முன்பு கூட இது போன்ற புத்தக வியாபாரத்தி லீடுபட்ட எழுத்தாளிகள் பலர் ஏதென்ஸ் நகரத்தில் குடியிருந்து வந்தனர். அவர்கள் கடைத்தெருக்களிலும் சந்தைகளிலும் தமது காரியாலயத்தை அமைத்துக்கொண்டிருந்தனர். அலெக்ஜாந்தர் சக்ரவர்த்தி யின் நாட்களிலேயே புத்தக வியாபாரமென்பது ஒரு நிலை யான வருமானத்தை யளிக்கும் தொழில்களில் ஒன்ருக விளங்கியது.

மக்கட்குக் கண்போன்றது கல்வியென்பது நமது நாட் டுப் பெரியார்கள் கொண்டுள்ள கருத்து. இது மிக அழகிய தோர் உவமானமாகும். இதனுல் வற்புறுத்தப்படும் உண்மை ஆழ்ந்து சிந்தித்தற்குரியது. உயிரினங்கட்கெல்லாம் கண் இன்றியமையாத உறுப்பு. ஒருவனுக்குக் கண் இல்லையேல் நுகர்தற்குரிய நலன்களெல்லாம் பயன்படா தொழிகின்றன. இயற்கை வனப்புக்களெல்லாம் அவன்பால் சிறிதும் உணர்ச் சியை எழுப்பமாட்டாதனவாய்க் கழிகின்றன. வானத்தில் சூரியனையும், இரவில் நட்சத்திரங்கள் சூழவிருக்கும் சந்திர னையும் அறியான்; பூமியை ஓரான்; மலைகளையுணரான்; கட லினைக் காணுன்; வீட்டினையறியான்; தன்னுடன் பயிலும் மக்களை அறியான்; செறிந்த அந்தகாரமானது அவனை எங் கும் சூழ்ந்திருக்கின்றது. சுருங்கக் கூறின் அவனுக்கு உலக வாழ்வென்பதே இல்லாதொழிகின்றது. இங்ஙனமே கல்வி அறிவில்லாதவனும் திணிந்த இருளுலகில் தட்டுண்டு தடு மாறி யுழல்கின்ருன். இவனுக்கு உலக வாழ்வென்பது

இல்லையென்றே கொள்ளலாம். இவ்வாறாக, மக்கள் உயிர் வாழ்வதற்கே இன்றியமையாத பெருஞ்சிறப்பினதாயுள்ளது கல்வி. இது யாவர்க்கும் ஒப்பமுடிந்ததே. ஆனால் எம் முறையில் மக்களைக் கல்வி பயிற்றுவித்தல் வேண்டும் என்பது மிகப் பூர்வகாலந்தொட்டு இன்றுவரை ஆராய்ச்சிக்கிடமாய் நின்றுவரும் அரிய விஷயமாயுள்ளது. அரசினரும், சமுதாயத்தின் அபிவிருத்தியை நாடும் நல்லறிஞர்களும் மேற்கொண்டு வரும் பெருமுயற்சிகளுள்ளே மிக முக்கியமானது இக்கல்வியைக் குறித்ததேயாகும். கல்வியை மக்களிடையே பரக்க விதைத்தற்குரிய அதிநூதன முறைகளை மேல்நாட்டினர் கண்டுபிடித்து உபயோகிக்கின்றனர். அவர்களால் கையாளப் பெற்றுவரும் அதிசிறந்த முறைகளுள் ஒன்றாகும் விவரிக்கின்ற புத்தகப் பிரசாரம்.

காலந்தோறும் அவ்வக் காலத்திற் கிடைப்பனவாகிய சௌகரியங்களுக்குத் தக்கவாறு கல்வியைப் பரவச்செய்வதற்கு ஒவ்வொரு சாதனம் ஏற்படுவதாகும். எழுத்துக்களே வழக்கிலில்லாத அதிபுராதன காலத்தில், கேள்வியின் மூலமாக அறிவு பரவி வந்தது இக்காரணத்தாலேயே முற்காலத்தில் கேள்வி ஞானம் மிக விசேடமாய்ப் பாராட்டப் பெற்றது. நெடுங்காலத்திற்குப்பிறகே எழுத்துக்கள் வழங்கப்பெறலாயின. கல்விகற்க விரும்புவோருடைய கருத்து இனிது முற்றுதற்குரிய கருவிகள் இப்பொழுது கைகூடின. கற்றற்குரியவற்றிற் பெரும்பாலன நூல்களாயமைந்தன. இவற்றைக் கற்பித்தற்குக் கலாசாலைகள் நிறுவப்பெற்றன. 'கணக்காயர்' என்பது இக்கலாசாலையில் நூலுரைப்போர்க்கு முற்காலத்து வழங்கிய பெயர். பின்பு காலத்தாலும்

இடத்தாலும் நிலைபெற்றடைய இடங்களே கல்வி நிலையமாக இருத்தற்குரியன என்ற உணர்ச்சி தோன்ற, திருக்கோயில்களிற் கல்விச்சாலைகள் அமைக்கப்பெறலாயின. இங்கே பெரும்பாலும் சமயச்சார்பான நூல்களையே ஓதியுணர்ந்து வந்தனர். முகம்மதியர் ஆட்சியிற்கூட ஒவ்வொரு குக்கிராமங்களிலும் பள்ளிக்கூடம் இருந்து வந்ததென்ற உண்மையைச் சரித்திரக்காரர் நன்கறிவர்.

பல்வேறு சமயத்தைச் சார்ந்த துறவிகள் தாங்கள் வசித்துவந்த மடங்களிற் கல்வியைப் போற்றி நூல்களைத் தொகுத்து வருவாராயினர். இத்துறவிகள் கல்வியின் பொருட்டுச் செய்துவந்த நன்மைகள் மிகப்பல; தாமே ஆசிரியராயிருந்து கைம்மாறு கருதாது கல்வி போதித்து வந்தனர்; ஆயுள்முழுவதும் மாணவராயிருந்து இடைவிடாது பயின்று கல்வியை அபிவிருத்தி செய்தனர்; அரிய நூற்கள் பலவற்றை யொருங்கு தொகுத்துப் பிரதிகள் செய்வித்துத் தங்கள் பரம்பரையினர்க்கு என்றும் அழியாத ஞானப்பெருநிதியை ஈட்டிவைக்கத் தலைப்பட்டனர்.

இவ்வகை முயற்சிகளாற் கல்வியின் எல்லைப் பரப்பு விரிந்து கொண்டே வந்தது. மடங்கள், கோயில்கள், கலாசாலைகள் முதலியன வித்தியாதானத்தைத் தாமே மேலிட்டுக் கொண்ட பொறுப்பின்றிப் பிறிதொரு பொறுப்புமில்லாதனவாயிருந்தன. கல்வியின் அருமை பெருமையும் அதன் இன்றியமையாச் சிறப்பும் அரசர்களால் முற்காலந்தொட்டே நன்குணரப்பட்டிருந்தன. எனினும், அக்கால அரசர்கள் கல்வியிற் சிறந்தோர்களையும் கவிவாணர்களையும் பொருள்

முதலியன கொடுத்துப்போற்றி வந்தனரேயன்றிப் பிறவாறு பொதுக் கலாசாலைகள் நிறுவிப் பொதுக்கல்வியை எவ்வளவு வரை விளைவு செய்வித்தார்களென்பது தெரியவில்லை. அது எவ்வாறாயினும் தற்காலம் கல்வியை மக்களிடையே பரப்ப முனைந்து வேலைசெய்து வருகின்றனர் என்பது கண்கூடு. மேற்கூறிய பலவகையானும் கல்வி ஏற்றமடைதற்குத் தகுதியுற்ற இக்காலத்தில், நூல்கள் பெருகுதற்குரிய சாதனமாகிய 'அச்சுயந்திரம்' நமது நாட்டில் மேனாட்டாராற் கொண்டு வரப்பட்டது. அதனால் அளவற்ற நன்மைகள் விளைந்து வருகின்றன வெனினும், அறிவினால் ஆராய்ந்து கற்றற்குரிய பொருள்கள் அளவின்றிப் பரந்துகிடப்பினும், துணைக்கருவியாயுள்ள நூற்களைப் பெருக்கி நமது நாட்டிற் கல்வியை அதிகம் பரவச்செய்ய முயன்று வந்தபோதிலும், நம்மவர்களில் நூற்றுக்கு ஏழுபேர் வீதமே எழுத்தறியும் அத்துணையளவு கல்வி வயின்றுள்ளார்கள். 35-கோடி ஜனங்களுள்ள நம் நாட்டில் 100-க்கு, 93-பேர்கள் எழுதவும் வாசிக்கவுந் தெரியாத நிரட்சரக் குட்சிகளாயிருக்கிறார்கள். மேலைத் தேசங்களிற் கல்வியறிவில்லாதார் நூற்றுக்கு ஏழு வீதத்தினுங் குறைந்திருக்க, நமது நாட்டிலோ அத்துணையளவாகவே கற்றோர்களிருக்கின்றனர். நமது தேச மக்களை இருள்போற் சூழ்ந்திருக்கும் இவ்வறியாமையைப் போக்குதற்கு, அரசாங்கத்தினரும், பிரபுக்களும், கல்விமிக்க நல்லறிஞர்களும் கூடி ஒன்றுபட்டு முயற்சி செய்தல் அவசியம். இம் முயற்சியில் எல்லோரும் ஒருங்கு போற்றுதற்குரிய பெருங் கருவியாயுள்ளவை நூற்களே! இந்நூற்களை எல்லோரும் அடைய வசதியும், அதனைக் கற்க ஆசையும் உண்டாகும்படி செய்தல் வேண்டும்.

அறிவு பெருகி வளர்தற்கு நூல்களைக் காட்டினும் சிறந்த கருவி பிறிதொன்றில்லையென நாம் பல வழியானும் நன்குணர்ந்தோம். ஆசிரியர்கள்பாற் கற்பது ஒரு சிறிதள வாகவே எப்போதும் இருத்தல்கூடும். 'ஆசானுரைத்தது அமைவரக் கொளினும், காற்கூறல்லது பற்றலனாகும்' என்றார் பவணந்தியாசிரியர். ஆசிரியரது நல்லுதவி பெரிதும் வேண்டத் தகுவதும் போற்றத் தகுவதுமாகவே யுள்ளது. எனினும், கல்வியெனப்படுவது கற்கும் மாணவன் நூற்களைத் தானே ஓதியுணர்ந்து தானே சிந்தித்து ஆராய்ந்து துணிவதன் பயனாகவே அமையுமென்பது யாவர்க்கும் ஒப்ப முடிந்ததாம். எனவே, பிறருதவி வேண்டாது தாமே ஓதி யுணர்தற்குரிய நூல்கள் மக்களிடையே பரவப்பரவ, கல்வியும் பரவி அஞ்ஞானமும் அகன்றொழியும்.

நூல் நிலையங்கள் இக்காலத்தே புதிதாக ஏற்படுவன வெனல் பொருந்துவதன்று. கடைச்சங்க நூல்களனைத்தும் தொகை நூல்களாகும். புலவர்கள் பலர் பாடியவற்றைத் தனித்தனி நூல்களாகத் தொகுத்த காரணத்தாலேயே இப் பெயர் வழங்குவதாயிற்று. கடைச்சங்க நூல்களிற் பெரும் பாலனவற்றைத் தொகுத்தான் இன்னவனென்றும், தொகுப்பித்தான் இவ் வரிசனென்றும் கூறப்பட்டுள்ளன. தொகை நூல்கள் எழுந்த வரலாறு இதுவாயின், வேறு வேறு காலத்து, வேறு வேறு இடங்களில், பலராற் பாடப் பெற்ற நூல்கள் ஓரிடத்தே அரசர் முதலியோரால் தொகுத்து வைக்கப் பெற்றிருந்தன என்பது உண்மையாகக் கொள்ளக்கூடியதே. இவ்வகை நூல் நிலையங்கள் விளங்கிய

இடமே சங்கம் என வழங்கப்பெற்றதென்று கொள்ளுதல் பொருந்தும். கடைச்சங்க காலம் கி. பி. முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டென்பர். அக்கால முதற்கொண்டே தமிழ்நாட்டில் நூல் நிலையங்கள் விளங்கிவந்தனவாதல் ஒப்புக்கொள்ளத் தகுந்ததே. அரசர்களும், ஜைன சங்கத்தவரும், தேவாலய கர்த்தர்களும் நூல்-நிலையங்களமைத்துப் போற்றி வந்தார்கள். தேவாரம் என்னும் பாடல், சிதம்பரமாகிய திருக்கோயிலுள்ளே சேமித்து வைக்கப்பெற்றிருந்தனவென்பது பிரசித்தம். கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் வச்சிரநந்தியின் சங்கம் இருந்தது அனைவரும் நன்கறிந்ததே. சீவகசிந்தாமணிக்காலமாகிய ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியிற் சங்கம் ஒன்றிருந்ததையும் ஆராய்ச்சியாளர் அறிவர். பிற்காலத்தில் மடாதிபதிகள் தத்தம் மடங்களிலே நூல்களைத் தொகுத்துவைத்துப் போற்றி வந்தமையும் யாவரும் அறிந்ததே. தஞ்சை அரண்மனையைச் சார்ந்த 'சரஸ்வதி மகால்' கலைவாணரது உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுஞ் சிறப்புமிக்கதொரு நூல் நிலையமாக யிருந்ததென்பதை நாம் நன்கறிவோம். எனவே, மக்களால் நூல்களின் அவசியம் உணரப்பெற்ற மிகப் பழைய காலந் தொட்டே நூல்களைச் சேகரிக்கும் நூல் நிலையங்கள் தமிழ் நாட்டில் உள்ளனவென்றே கொள்ளுதல் வேண்டும். ஆனால், இடையிட்ட காலத்தில் இவ்வியக்கத்தின் வலி குன்றியிருந்ததென்பதையும் நாம் மறுத்தற்கில்லை. முற்காலத்திருந்த நூல் நிலையங்களுக்கும், தற்காலத்தில் நிறுவப்பெறும் நூல் நிலையங்கட்கும் பெரிதும் வேறுபாடுண்டு. நூல்கள் இறந்துபடாமல் காத்தற்

பொருட்டு ஓரிடத்துத் தொகுத்து வைத்தலே முற்காலத்துப் பெருநோக்கமாயிருந்தது. பெரும்பாலும்பண்டை நூல்கள் இவ்வாறே போற்றிவரப்பெற்றன. இந்நூல் நிலையங்கள் யாரேனும் ஒருவருக்குத் தனிப்படவுரியனவாயிருந்தன. நூல்கள் தவறிவிடாதிருத்தற்பொருட்டும், பழுதுபடாதிருத்தற்பொருட்டும் கடினமான நியமங்கள் கையாளப்பட்டு வந்தன. நிலையங்களிலிருந்து நூல்களைப் பெரும்பாலும் இரவல் கொடுப்பதேயில்லை. பொதுச்சனங்கள் இவற்றால் சிறிதும் பயன் கொள்ளத்தகாத முறையில் இவை அமைந்திருந்தன. தற்காலத்து வேண்டப்படும் நூல்நிலையங்களின் நோக்கம் முற்றிலும் வேறாகவுள்ளது. பொது மக்கட்குப் பயன் பட்டு அவர்களுடைய கல்வி விருத்தியாக வேண்டுமென்பதே இவற்றின் தனிப்பெருநோக்கம். ஒரு நாட்டு மக்கள் பல திறத்தானும் உத்தம வாழ்வு வாழ்வதற்கு வேண்டும் கல்வியறிவனைத்தையும் நூற்கள் மூலம் உதவிவர எல்லா வகையானும் முயற்சி செய்தல் அவசியம். நமது பண்டைய அநேகம் நூற்கள் நெருப்பாலும், நீராலும், திருட்டாலும், மாற்றரசர் படையெடுப்பாலும், கறையான்—பூச்சிகளாலும் அழிந்தொழிந்தன. அரிய நூற்செல்வங்களைப் பரிபாலிப்பதன்கண் நாம் மேற்கொள்ளவேண்டுங் கடமையை இனியேனும் உணர்ந்து உரியவாறு முயல்வோமாக! அறிவின் மூலமாய் ஒற்றுமையை மிகுதிப்படுத்தி நல்லின்ப நெறி நிற்றற்கு வேண்டும் புத்தகங்களை உற்பத்தி செய்து, பாதுகாத்து, அதன்வழி நடந்து, அதனாலாய பயனை அடைய முயல்வோமாக!

உயர் நூற்களைப் பொருள் செய்யும் வன்மை அறிவோர் களுக்கே யுண்டு. பொது மக்களுக்கு என்செய்வது? அல்லும் பகலும் தொல்லைப் பட்டு இல்லம் சேரும் மூளைக ளுக்கு உயர் நூற்களைப் பொருள் செய்யும் வன்மை இருக்க முடியாது. சேயின் உடல் நலம் தெரிந்து பால் ஊட்டும் தாய்போல், மக்கள் மூளைத்திறனறிந்து நூல்களை வழங்க வேண்டும். அரிய கருத்துக்கள், உயர்கொள்கைகள், இனிய-எளிய நடை கொண்ட புத்தகங்கள் ஆக்குவோரை ஊக்க வேண்டும். அறிவுத்தெய்வம் வதியும் கோயிலின் பாதை யாவரும் முயற்சியின்றி நடக்கும்படி செப்பனிடப்பட வேண்டும். பொதுமக்கள் நூற்களாற் பயன் பெறும் வண்ணம், வாழ்க்கையை இனிமைப் படுத்தும் வண்ணம் நூற்கள் பெருகுதல் வேண்டும். இதுகாறும் கூறிவந்த விஷயங்களால் மக்கள் ஓர்எல்லையில்லாப் பயனை நூற்களினுற் பெற முடியுமென்பதாயிற்று. இத்தகைய உயர்ந்த பலனை நல்கும் புத்தகங்களை நாடுகளில் வீதிதோறும் வீடுதோறும் பரப்ப முயல்வோமாக!

புத்தகங்களின் பயன் என்ற இக் கட்டுரையில் அதன் வரலாறு, அதனைச் சேமித்து வைப்பதாலுள்ள நலன் முதலியன பற்றியும் கூறுதல் பொருந்துமெனக்கொண்டு அவ்வகையும் இங்கு விளக்கலானேன்.

அறிஞர்கள் எழுதிவைத்துள்ள புத்தகங்களின் துணை கொண்டும், பத்திரிகைகளின் துணைகொண்டும், அவை களின் பயனுய் ஏற்பட்ட அறிவு கொண்டுமே இக் கட்டுரை எழுதலானேன் என்று கூறி முடிக்கின்றேன்.

லெ. முத்துராமன்,
28—8—33.

L. Muthuraman,
*Kilasavalpatti P. O.*
*(Ramnad Dist.)*

L Muthuraman
Ramnad: Kilasavalpatti

## இக் கட்டுரைப் போட்டியில்
### கலந்துகொண்ட மற்ற அன்பர்
## கட்டுரைகளின் சாரம்.

---

திரு; ஆதிநாதன் அவர்கள்,
ஆசிரியர்,
பொன்னமராவதி. P. O.

கற்றவர்களுக்கும், கல்லாதவர்களுக்கும் நூல் பயன் படும். கற்றவர் தம் கல்வியை மிகுத்துக்கொள்ளவும், கல்லாதவர் கற்றுக்கொள்ளவும் உபயோகப்படும்.

சொற்பொழிவுகள் நிகழும் இடத்திலிருப்பவர்களுக்கே பயன்படுகின்றன. புத்தகங்கள், பலவிடங்களில் இருப்பவர்கட்கும் பயன்படுகின்றன. அல்லாமல், பலகாலத்தும் பரம்பரையாகப் பயன்படுகின்றன.

நல்ல நூல் என்றும் அழியாது. அரும்புலவர்களியற்றிய பெருந்தகை நூற்கள் என்றும் போற்றுதற்குரியன.

---

திரு; வீ. கேதார முதலியார் அவர்கள்,
தாமரைக்கேணி,
மட்டுக்களப்பு; சிலோன்.

புத்தகம்............புது / அகம் எனப்பிரிக்கலாம்.

அதாவது, அகம் = மனதை; புது = புதிதாக்குவது.

அஞ்ஞானமாகிய மனவிருளைப் போக்கி, அறிவாகிய வெளிச்சத்தை நல்க வல்லது புத்தகங்கள்.

திரு; அ. பழ. சித. அழகப்பன் அவர்கள்,
ஸ்ரீ மீ. சு. கலாசாலை மாணுக்கர்,
கீழச்சிவற்பட்டி.

கல்வியாகிய சீவனுக்கு — புத்தகங்கள் சரீரம் போன்றவை. புத்தகங்களைச் சிறந்த சீர்திருத்த வாதிகள் எனக் கூறலாம்.

ஞாபகசக்தி குறைந்துள்ள மக்கள் பழைய விஷயங்களை உணர்ந்து கொள்ளப் புத்தகங்கள் உற்ற துணையாக இருக்கின்றன.

பல அரிய கருத்துக்கள் மறைந்துபடாமல் என்றும் நிலவச் செய்வன புத்தகங்களே.

ஓர் ஆசிரியன் பல நாடுகட்கும் சென்று பல மாணவர்கட்கும் போதிப்பது முடியாது. புத்தகங்கள் பல நாடுகட்கும் சென்று பலருக்கும் போதிக்கும் தன்மையுடையன.

நூல்கள் மிகப் பெருகியுள்ள நாட்டுமக்களே எல்லாத் துறைகளிலும் சிறந்து விளங்குவார்கள்.

மொழி வளர்ச்சியடையக் கவர்ச்சியுள்ள புத்தகங்களே சிறந்த சாதனங்கள்.

தமிழ்மொழியில் உயரிய நூற்கள் தோன்ற ஒவ்வொரு தமிழ் மகனும் தன்னாலான உதவிபுரிய வேண்டும்.

---

திரு; ஊ. சா. வேங்கடராம அய்யரவர்கள்,
கும்பகோணம்.

அறிவு வளர்ச்சிக்குப் புத்தகங்கள் பெரிதும் துணை செய்திருக்கின்றன.

திரு; N. R. விஸ்வநாதன் அவர்கள்,

பி. அழகாபுரி. கீழச்சிவற்பட்டி P. O.

அறிஞர்களின் புத்தகங்கள்; ஆராய்ந்து பார்க்கும் எளியோனையும் அறிஞனுக்கும்.

---

திரு; A. திருமேனி அவர்கள்,

அழகாபுரி.

நூலளவேயாகுமாம் நுண்ணறிவு.

"புத்தகத்துள்ளுறை மாதே" என்று நாம் கலைத்தெய்வத்தின் இருப்பிடமாகப் புத்தகங்களைப் போற்றுகின்றோம்.

"புத்தகம் அத்தபூஷணம்" என்று சிறப்பிக்கின்றோம்.

---

திரு; C. ராஜகோபாலதாதாசாரியர் அவர்கள்,

திருவரங்கம்,

அரகண்டநல்லூர் வழி, S. I. Ry.,

புத்தகமானது உண்மை, புகழ், பொருள் முதலியன அளிப்பதோடல்லாமல் துக்கத்தில் மகிழ்ச்சி தரவும் உதவுகின்றது.

---

திரு; T. S. சோமாஸ்கந்தர் அவர்கள்,

பிரம்பூர், மதராஸ்.

புத்தகத்தோடு பழகப்பழகஅறிவும், ஒழுக்கமும், சிறப்பும் உண்டாகும்.

சில புத்தகங்கள் பாகு போன்றும், சில புத்தகங்கள் கற்கண்டின் மதுரம் போன்றும், சில புத்தகங்கள் தீஞ்சுவைச் சாறு போன்றும் இனிமை அளிக்கின்றன.

நம்முடைய பிறப்பை யொத்தது புத்தகத்தினுடைய முகவுரை; நம்முடைய வாசஸ்தலங்கள் போன்றவை புத்தகத்தினுடைய ஏடுகள்; குழந்தைப் பருவமும்–யெளவனப் பருவமும்–விருத்தாப்பியப் பருவமும் போன்றன புத்தகத்தினது பொருளடக்கங்கள்; வாழ்நாளின் நடவடிக்கைகள் போன்றன புத்தகத்தினுடைய விஷயங்கள்; தீச்செயல்களும்–தவறுதல்களும் போன்றவை புத்தகத்தினுடைய எழுத்துப்பிழைகள்; திருத்தங்கள்–மாற்றங்கள் போன்றவை புத்தகத்தின் மீதுறும் அனுதாபங்கள்.

அடிசன்:—மரணசாசனப் பொருள்களாயுள்ளவை புத்தகங்கள். இவைகள் பிரசித்திபெற்ற கலைவாணர்களால் நமக்கு அளிக்கப் பெற்றன. தலைமுறை தலைமுறையாய் இனிப் பிறக்கப் போகின்றவர்களின் சந்ததிக்கும் பரிசாகுமாறு தரப்பெற்றன.

கார்லைல்;—மனிதர் உண்டுபண்ணக்கூடிய சகல வஸ்துக்களிலும் சிறந்தது புத்தகந்தான். இன்றியமையாதது மிதுதான். ஆச்சரியகரமானதுமிதுதான். உரிமையாகத் தந்தது மிதுதான்.

ஸிஸரோ:—சிறுவர்களுக்கு ஆகாரம் போன்றது புத்தகம். விருத்தர்களுக்கு மனோகரமானது; வாழ்விற்கு அலங்காரமானது; கைக்கு அணிகலமானது; ஆபத்து நேர்ந்த காலத்தில் தேறுதல் கூறும் அரிய நண்பனைப் போன்றது புத்தகம். ஆதரவானதுமதுதான். வீட்டிலுள்ளபோது உற்சாகத்தை யூட்டவல்லதுமதுதான். தடையற்று–இராக்காலங்களிலும், சுதேசத்திலும், பிரயாணத்திலும் இதுதான் அருஞ்சகாயமாய் நிற்பது.

எமர்ஸன்:—பெரியோர்களுடைய அரிய பெரிய செயலி லுண்டாகின்ற நன்மைகளை நாமடையத் துணையாயிருப்பது புஸ்தகமாகையினுல், அதனை நாம் கைவிடாமல் காப் பாற்றவேண்டும்.

ஸர் ஆர்தர் ஹெல்ப்ஸ்;—படிக்கும்போது திருத்தமான சொற்களாகிய கருத்துக்களையும், ஞானவான்களுடைய சிறந்த போதனைகளையும், நமது மனதிலே பதியவைப்பதற்கு ஆதாரமானது புத்தகமேயாம். இவ்வாறு பதியவைப்பதும், ஜீவியமான அறிவின் பொக்கிஷத்தை நாம் அபிவிருத்தி செய்யும்படி தூண்டுவதும் புத்தகமேயாம் அந்தப்பொக்கி ஷத்தினின்றும் எல்லாக் காலங்களிலும் வேண்டிய ஆறுதல், புத்திமதி, அநுதாபம் என்பன போன்றவற்றைக் கிரகிக்கத் தக்க சக்தியை அளிப்பதும் புத்தகமேயாம்.

---

திரு; K. K. R. V. இராமநாதன் அவர்கள்,
சிவவயலார் தெரு,
தேவகோட்டை.

அறிவு என்னும் பயிருக்குப் புத்தகம் தண்ணீர் போல வும், அறியாமை என்னும் களைக்குப் புத்தகம் களைக்கோல் போலவும் இருக்கின்றது.

---

திரு; வி. பி. சிவன் அவர்கள்,
அமராவதி புதூர்,
(காரைக்குடி வழி.)

மனிதரது மனத்தின் கோணலைத் தீர்த்து செவ்வை செய்வது புத்தகம். மனிதன் எத்தகைய நூல்களுடன்

பழகுகின்ருேனே, அத்தகைய நூல்களின் குணமே அவன் பால் ஒளிரும்.

ஏறக்குறைய 2-கோடிக்கதிகமான தமிழர்கள் இருக்கும் இந்நாட்டில் நல்லதும் கெட்டதுமாக 3000-ம் புத்தகங்களே இருப்பதாக சுவாமி விபுலானந்தர் கூறுகின்ருர். 16-கோடி மக்களுள்ள ரஷ்யாவிலே சராசரி ஒரு மனிதனுக்கு 6-புத்தகங்கள் வீதம் வெளியிடப்பட்டிருக்கின்றனவாம்.

மான்டெயின்:— எனது முதிர்ந்த வயதிலும், நான் தனித்திருக்கும் நேரங்களிலும், என்னெஞ்சம் துன்பங்களால் குழப்பமெய்தித் தடுமாறுங் காலங்களிலும் நூற்கள் எனக்குப் பேரின்ப மளிக்கின்றன. சோம்பேறித்தனத்தால் உண்டாகும் மனப்பாரத்தை நூல் ஒழிக்கின்றது. அறிஞர்கள் தம் அநுபவத்திற் கண்ட அறிவு நூற்களே எனது துணையற்ற ஆரம்ப வாழ்க்கையில் பெரிய பற்றுக்கோடாகவும், ஏணியாகவும் உதவின.

அன்டோல் பிரான்வில்:— நூலினின்று பல புதிய தோற்றங்கள்; பல புதிய யுகங்கள்; நவீன சிந்தனைகள் யாவும் தோன்றி மனதை நிலையாகப் பண்படுத்துகின்றன. நூல் என்பது சென்ற கால உலகிற்கும், எதிர்கால உலகிற்கும், நம்மைக் கொண்டு செல்லும் மந்திரக் கருவி.

---

திரு; G. வைத்தியநாதன் அவர்கள்,
வெள்ளையனூரணி, மேலவீதி,
தேவகோட்டை

கடலில் மரக்கலம் செலுத்தும் மாலுமிக்குத் திசையறி கருவியின் உதவி அவசியம் வேண்டியதிருப்பதுபோல, மக்

கள் உலக வாழ்க்கையைச் சரியாக நடத்துதற்குக் கருவி போன்றமைந்துள்ள புத்தகங்களின் உதவியும் அவசியம் வேண்டும்.

---

திரு. செ. ரே. இராமஸாமி பிள்ளை அவர்கள்,
காரியதரிசி, ஜவஹர்லால் வாசகசாலை,
பாகனேரி.

பகுத்தறிவு கொண்ட பெரியார்கள், பிற்காலத்தார்க்கு அவ்வறிவை விளங்க வைக்க எழுதப்பட்டவைகளே புத்தகங்கள்.

பலதிறப்பட்ட மக்களின் உயரிய பண்பு, ஒழுக்கம், ஊக்கம் முதலிய எல்லா இயல்புகளையும் விளக்குவது புத்தகமாதலின், ஒரு சிறு புத்தகத்தையும் நாம் ஒழிக்கக்கூடாது.

---

திரு. உ. மு. சோமசுந்தரன் அவர்கள்,
பாகனேரி.

அரசர்கள் சிறப்பினும் கற்றோர்கள் சிறப்பைப் பெரிதாக வியந்து கூறியிருக்கின்றனர் நமது மூதறிஞர். அப் பெருஞ் சிறப்புக்குப் புத்தகங்களே பெருங் காரணம்.

---

திரு. ரா. கந்தஸாமி அவர்கள்,
மேலைச்சிவபுரி.

ஒரு நாடு செழிப்படைய வேண்டுமாயின் அந் நாட்டு மக்கள்பால் கல்வியறிவும், உலகியல் ஞானமும் வேண்டிய

தவசியம். அத்தகைய நாட்டில்தான் ஒற்றுமை யுணர்ச்சியும், உயர் தனி நோக்கமும் செழித்தோங்கும். இவை அனைத்திற்கும் புத்தகத்தின் உதவி மிகுதியும் வேண்டும்.

---

திரு: T. R. நாராயணன் அவர்கள்,
No. 7, சாமராவ் அக்ராகாரம்,
திருவையாறு.

அறிவைப் பெருக்கி அதனைச் சரியான வழியில் உபயோகிக்கச் சாதகமாயிருப்பவை புத்தகங்கள்.

மனிதனின் பாமரத் தன்மையை நீக்கிப் பண்டிதனாக உயர்த்தி யிருப்பவை புத்தகங்களே.

---

திரு; ஆர். எம். எஸ். எம். கதிரேசன் அவர்கள்,
கொழும்பு.

மக்கள் இன்றுவரை அறிந்துள்ள கலைகளும் அநுபவங்களும் புத்தகங்களில் அடங்கிக்கிடக்கின்றபடியால் அவைகளைச் சேமித்து, எல்லோரும் அதன் பயனை அடையும்படி செய்தல்வேண்டும்.

---

திரு; டாக்டர் எஸ். எ. சின்னப்பர் அவர்கள்,
சண்முகநாதபுரம்.

"நூல் பல கல்" என்று மூதாட்டி மொழிந்த சூத்திரமே நமக்கு நூற்களின் பயனை நன்கு விளக்குவதாயிருக்கிறது.

மாசுபடிந்த மாணிக்கத்தைச் சாணையிலிட்டுத் தேய்த்து அதன் உண்மை யொளியைக் காண்பது போல, அறியாமை படிந்துள்ள அறிவைப் புத்தகமாகிய சாணையிலிட்டுத் தேய்த்தால் அதன் உண்மைத் தன்மை ஒளிரும்.

---

திரு. லா. கோ. சுந்தரராஜுலு அவர்கள்,
அமைச்சன்: கம்பர் செந்தமிழ்ச் சங்கம்,
குளித்தலை.

நுண்ணறிவு படிப்படியாக வளருவதற்கு பரம்பரை பரம்பரையாகத்தோன்றி வந்துள்ள புத்தகங்களே காரணம்.

ஓர் ஓவியக்காரன் எவ்வாறு சாயங்களால் ஓவியங்களைத் தீட்டிக் கண்முன் காட்டுகின்றானோ அதே போன்று தங்கள் கருத்துக்களைப் புத்தகங்களில் எழுதிக் காட்டினார்கள் நமது முன்னோர்கள்.

அபாரமான கருத்துக்களை கவிகள் மூலம் எளிதில் விளக்கத் தக்கன புத்தகங்கள்.



# முடிவுரை.

இப்போதுள்ள இளைஞர்கள் பள்ளியை விட்டதும் படிப்பைப்பற்றிக் கவனியாது தங்கள் மனத்திற்கும் தேகத்திற்கும் தீங்கிழைக்கக்கூடிய துறைகளிற் செல்லுகின்றனர். தாங்கள் பள்ளியில் படித்த படிப்பைக் கொண்டு ஆராய்ந்து, சிந்தித்து, உணர்ந்து, ஒழுகுதற்குரிய காலம் பள்ளியை விட்ட பின்னரே அமையுமென்பதை மறந்துவிடுகின்றனர். மறந்துவிடுவதோடல்லாமல், உடல்நிலை தாழும் முயற்சிகளிலேயே பெரிதும் ஈடுபடுகின்றனர். உடல்நிலை தாழின் உயிர் நிலை தாழக் கேட்பானேன்! உடல் நிலை சிறு வயதிலேயே கெட்டுச் சக்தி குறைந்துபோனால், சிந்தித்ததை ஆராயவும்—ஆராய்ந்ததை உணரவும் – உணர்ந்ததைச் செயலில் கொணரவும் எங்ஙனம் சாத்தியமாதல் கூடும்? இக்குறைகள் நிவர்த்திக்கப்பட்டாலொழிய நாம் படிப்பில் ஒருபோதும் முன்னேற்றமடைய முடியாது. படித்தவர்களாகக் கருதப்படும் அநேகரிடத்திலும் இக் குறைபாடுகள் காணக்கிடக்கின்றன. அவர்கள் சமநிலை பெறாத கல்வியாளர்கள் என்று உடற் தத்துவ சாஸ்திரிகள் கூறுவர். இத்தகையோர் பச்சோந்தி போல அடிக்கடி குணம் மாறுவர். இவர்கள் நிலையாக ஒன்றினையும் செய்யார்கள். இழிகுணம், நம்பிக்கைத் துரோகம் போன்ற செயல்களையும் இன்னவர் கையாள்வர். இவர்களில் சிலர் விதவைகள்பால் இரக்கம் உடையோர்போல் காட்டி, தானே தலைவனாகி, சீர்திருத்தக்காரர் போன்று தோன்றி நடிக்க முற்படுவர். உண்மை உணர முடியாத பொதுச் சனங்கள் இவர்கள் சூழ்ச்சியில் சிக்கி ஏமாறுவர். இவ்வாறான

நிகழ்ச்சிகளை நாம் பலகாலும் பலவிடத்தும் கண்டுவருகின்றோம். இன்னோரன்ன தீமைகளை எதிர்க்கத்தக்க அறிவினை நமதிளைஞர்கள் பெறவேண்டும். அதனைப் பெறுவதற்குரிய உயர்ந்த சாதனங்களில் சிறந்தன புத்தகங்களும் பத்திரிகைகளுமேயெனக்கொண்டு, ஸ்ரீ பாரதி வாசகசாலையார் செய்து வரும் இவ்வருந்தொண்டுக்கு நாம் ஆதரவளிக்கக் கடமைப் பட்டிருக்கிறோம்.

"பாடை ஏறினும் ஏடதுகைவிடேல்" என்று மொழிந்த நமது முன்னோர்கள் வாசகமொன்றே புத்தகங்களின் பயனை விளக்கப் போதுமானதாகும். ஆகவே, இளைஞர்களே எழுங்கள்! தீமைகளை வெல்லுங்கள்! உண்மை கண்டு மகிழுங்கள்! சூழ்ச்சியாளரை நசுக்குங்கள்! ஆராய்ச்சியில் நுழையுங்கள்! அறிவைப்பெருக்குங்கள்! ஆண்மை கொள்ளுங்கள்! தாட்சண்யத்தை விலக்குங்கள்! புத்தகங்களின் பயன் காணுங்கள்!



